# இதயத்தின் இரகசியம்

## முகவுரை

'இதயத்தின் இரகசியம்' என்னும் இந்நூல் அல்லாமா இக்பால் அவர்கள் எழுதிய 'அஸ்ரா ரெகுதி' என்னும் நூலின் தமிழாக்கமாகும். கிரேக்க வேதாந்திகளின் கொள்கையில் மயங்கி தன்னுணர்வு அற்றிருந்த முஸ்லிம்களுக்கு புத்துணர்வூட்ட கவிஞர் இந்நூலை எழுதினார். ஆயிரம் ஆண்டுகளில் ரோமப் பேரரசு அடைந்த உன்னதத்தை சில பத்து ஆண்டுகளில் இஸ்லாமியப் பேரரசு அடையச் செய்து அற்புதம் புரிந்தவர்கள் அடைத்திருந்த தாழ்வு அவர் நெஞ்சை எவ்வாறு வருத்தியிருக்கிறது என்பதை இந்நூலில் காணலாம். தம் பெருவீரத்தால், பெரும் சாதனையால் உலகின் புருவத்தை மேலேறச் செய்த முஸ்லிம்கள் இன்று எல்லோராலும் ஏளனமாகப் பார்க்கப்பட்டு இகழப்படும் நிலை கண்டு அவர் நெஞ்சுள் பற்றிய நெருப்பின் வெப்பத்தை இந்நூலில் உணரலாம். வாழ்விற்கு இலக்கணமான குர்ஆனும் அதற்கு இலக்கியமாய் அமைந்த அண்ணல் நபி (ஸல்) வாழ்வும் நமக்கிருக்க, வேண்டாத வேதாந்தங்களை நம்பி உள்ளழிந்து உணர்வழிந்த நிலை கண்டு அவர் நெஞ்சுருகுவதை நூல் நெடுகிலும் காண முடிகிறது. உடுக்கணங்களும், உறைந்திருக்கும் மலைகளும் ஊரும் நதிகளும் தம் ஆத்ம வலிமை பற்றிப் பெருமைப்படும் பொழுது இறைவனின் பிரதிநிதியான மனிதன் தான் வாழப் பிறக்கவில்லை, இறக்கப் பிறந்த தாய்ப் பிதற்றித் திரிவதன் பேதமை கண்டு கவிஞர் நெஞ்சம் குமுறுகிறார்.

வாழ்வை நோக்கத்தால் ஓம்பு, அந்த நோக்கத்தை விருப்பத்தால் வளர், விருப்பத்தை முயற்சியால் பெறு என்பதே அவர் விடுக்கும் வேண்டுகோளாகும். துன்பத்தைக் கண்டு துவளாதே, துணிவு கொள், பகைவர்களைக் கண்டு பயப்படாதே, அவர்களை நண்பர்களாகக் கருது, ஆபத்தைக் கண்டு அஞ்சி ஓடாதே, அதனை அணைத்து வாழ் என்பதே அவர் செய்யும் முழக்கமாகும்.

இதைப் போல் எத்தனை, எத்தனையோ கருத்துக்கள் நூல் நெடுகிலும் நிறைந்திருக்கின்றன.

பேரருளும் பேரன்பும் மிக்க அல்லாஹ்
பெருமை மிகும் பெயரதனால் துவக்கம் செய்வாம்.

# இதயத்தின் இரகசியம்

## முன்னுரை

'இதயத்தின் இரகசியம்' என்னும் இந்நூல் கிரேக்க தத்துவ ஞானியான பிளேட்டோவின் கருத்தை ஏற்று 'இறப்பதே வாழ்வின் இரகசியம்' என்று எண்ணி 'மனிதன் நித்திய வாழ்வு பெற வேண்டுமாயின் தான் என்னும் உணர்வையே ஒழித்துக்கட்ட வேண்டும்' என்று கொண்டு தவறான திக்கில் சென்று கொண்டிருந்த முஸ்லிம்களை சரியான திக்கில் திருப்பிவிட எழுதியதாகும். இந்நூலின் முன்னுரையான இந்த அத்தியாயத்தில் அல்லாமா இக்பால் அவர்கள் தம் ஞான குருவான ஜலாலுத்தீன் ரூமி அவர்கள் எங்ஙனம் பூர்த்தியுறா சிலை போலிருந்த தம்மை மனிதனாக்கினார் என்றும் தம் திறனையும் கடனையும் எடுத்துக் கூறி எப்படித் தட்டி எழுப்பினார் என்றும் கூறுகிறார். ஜலாலுத்தீன்ரூமி அவர்களுடைய சொற்களின் மூச்சுக் காற்றிலிருந்து உயிர் பெற்ற தாம் இது வரை எவரும் கூறாத இரகசியங்களெல்லாம் கூறப் போவதாய்த் தெரிவிக்கிறார். தாம் உலகிற்கு கூற விரும்பிய செய்தியைச் சொல்லத் தாம் தேர்ந்த மொழி பாரசீகம் என்றும் தம்மிடமிருந்து அழகு வணக்கத்தையோ காதல்

செய்வதையோ எதிர்பார்க்க வேண்டாமென்றும் கோப்பையைப் பற்றிக் கவலைப்படாது அதிலிருக்கும் மதுவின் சுவை பற்றியே அக்கறைப்படும்படியும் கேட்டுக் கொள்ளுகிறார்.

உலகையே ஒளிரச் செய்யும் பரிதிச்செல்வன் இரவின் மீது கொள்ளைக்காரன் ஒருவனைப் போல் பாயும் போழ்தில்,

என் அழுகை ரோஜா மலரின் வதனத்தைப் பனித் துளியைப் போல் நனைத்தது.

என் கண்ணீரோ நாணற் செடியின் விழியிலிருந்து உறக்கத்தையே கழுவிச் சென்றது.

என் வேதனையோ புல்லை விழிப்புறச் செய்து அதனை வளரச் செய்தது.

காவின் காவலனோ என் கீதத்தின் வலிமையைச் சோதித்தான்.

என்பாவை விதைத்து வாள் ஒன்றை அறுத்தான்.

காவிலே அவன் என் கண்ணீரின் வித்தையே புதைத்தான்.

என் புலம்பலை அவன் பாவும் அதனிடை அமையும் ஊடு நூலும் போலும் மலர்க்காவுடன் இணைத்து நெய்தான்.

நான் ஓர் அணுவேயாயினும் ஒளிரும் பரிதியே என்னதுதான்.



ஒரு நூறு உதயங்கள் என் உள்ளத்துள்ளே உறைகின்றன.

ஜம்ஷத்தின்* கோப்பையினும் என் புழுதியின் துகள் ஒளிமிக்கது.

அவனியில் இன்னும் பிறவா விஷயம் அனைத்தும் அது நன்கு அறியும்.

என் சிந்தனை ஒரு மானை வீழ்த்தி, கலணையில் அதனை நிறுத்தியது.

அதுவோ இன்னும் இயலாமை எனும் மாற்றத்திலிருந்து எழவில்லை.

இலைகள் பசுமை ஏற்பதற்கு முன்பே என்னுடைய காவில் வனப்பு மேவுமே:

பிறவா ரோஜா மலர்களெல்லாம் என்றன் முன்றானையின் ஓரம் மறைந்துறைகின்றன.

ஆங்கு ஒருங்கு சேர்ந்திருந்த இசை வாணர்தமை நான் ஊமையாக்கினேன்.

பிரபஞ்சத்தின் இதய நரம்பை நான் அடித்தேன்,

என் மேதையின் வீணை அரும் இசை பெற்றிருக்கிறதனால்:

---

★ ஜம்ஷத் - பாரசீக அரசர். அவரிடமிருந்த கோப்பை ஒன்றில் முழு உலகமும் காட்டப்பட்டதாய்க் கூறப்படு கிறது.

தோழர்களுக்குக் கூட என் கீதம் புதுமையாயிருக் கிறது.

புதிய பரிதியைப் போல் நான் உலகில் பிறந்திருக் கிறேன்.

வானத்து வழிகளையோ வண்ணங்களையோ நான் பயிலவில்லை:

என் ஒளியின் முன் இன்னும் உடுக்கனம் ஓடி ஒளியவில்லை.

என் பாதரசமும் இன்னும் கலங்கிப் போய்விட வில்லை.

கூத்தாடும் என் கதிர்கள் இன்னும் அலைகடலைத் தொடவில்லை.

ஒளிரும் என் குங்கும வண்ணம் இன்னும் மலை களைத் தழுவவில்லை.

வாழ்தலின் விழிக்கும் எனக்கும் அவ்வளவு பழக்கமல்ல;

என்னை நானே காட்டிக் கொள்ள அஞ்சியவனாய் நடுங்கிக் கொண்டே எழுந்தேன் நான்.

கிழக்கிலிருந்து என் உதயம் கிளம்பி வந்து சேர்ந்து இருளையே வீழ்த்தி அழித்தது.

உலகெனும் ரோஜா மலரின் மீது பனியின் புதிய துளியொன்று படிந்தது.



உதயத்தில் எழும் உழியர்க்காக நான் காத்துக் கொண்டிருக்கிறேன்:

ஓ, என் எரியைப் பரவும் எவரும் உவகையுறுவரே;

இன்றைய தினத்தின் செவி எனக்குத் தேவை யில்லை.

நான் நாளையக் கவிஞனின் குரலாவேன்.

என் ஆழ்ந்த பொருளை விரியும் என் யுகம் புரியப் போவதில்லை.

இந்தக் கடைத்தெருக்கு உகந்தவரன்று என் யூசுபும்.

என் பழைய தோழர்கள் எனக்கு அலுத்துப் போய் விட்டனர்.

வந்து கொண்டிருக்கும் மூசாவுக்காக என் சினாய்* எரிந்து கொண்டிருக்கிறது.

அவர்களின் (தோழர்களின்) ஆழியோ அரவமின்றி பனிபோல் அமைந்திருக்கிறது.

ஆனால் என் பனியோ விரிகடல் போல் புயல் அறுத்து இருக்கிறது.

என் கீதம் அவர்களின் உலகினும் பிரிதொரு அவனி யினதே :

★ *சினாய் - ஒரு மலை. இங்கு வைத்து, மூசா (அலை) அவர் களுடன் இறைவன் பேசினான்.*

இம்மணி யோசை மற்றப் பிரயாணிகளையும் சாலை வந்து சேர அழைக்கிறது.

அவன் இறந்த பின் அநேகக் கவிஞர்கள் பிறந்து விட்டனர்.

அவன் தன்னுடைய விழிகள் அலராதிருந்த போழ்தே நம்முடைய விழிகளைத் திறந்து விட்டான்.

ஒன்றுமில்லாததிலிருந்து மீண்டும் பயணமானான்.

அவன் புதை குழியின் மண் மீது ரோஜா மலர்கள் அலர்வது போல்.

இப்பாலை வழி மூலம் ஒட்டகைக் கூட்டம் பல சென்றிருந்தாலும்,

அவை ஒரு ஒட்டகை மட்டும் சென்றது போல் அரவமின்றிக் கடந்துவிட்டன.

ஆனால் நானோ ஒரு காதலனாயிருக்கிறேன் : உரத்து முறையிடுவதே என் நம்பிக்கையாகும்:

நியாயத் தீர்ப்பு நாளின் ஒலம் என் தோழர்களில் ஒன்றாகும்.

என் கீதமானது இசைக்கருவியினுடைய நரம்பின் எல்லையையும் மீறிச் செல்லுகிறது.

என்றாலும் என் வீணை உடைந்துவிடுமோ என நான் அஞ்சவில்லை.

என் தாரையை அறியாதிருப்பது நீர்த்துளிக்கு நல்லதாகும்.



அதன் சினம் அலைகடலையும் பைத்தியமாக்கி விடும்.

ஒரு நதியாலும் என் உம்மானைக்* கொள்ள முடியாது.

என் வெள்ளத்தைக் கொள்ள ஆழிகள் அனைத்தும் தேவைப்படுகிறது.

முகையானது, ரோஜா மலர் விளைகளமாய் விரியா விடில்,

அது என் இளவேனில் காலத்து மேகத்திரளின் கொள்ளைச் செல்வத்திற்கு ஏற்றதாயிராது.

என் ஆன்மாவினுள்ளே மின்னல்கள் அயர்ந்து உறங்குகின்றன.

நான் மலை மீதும் சமவெளி மீதும் பாய்ந்து செல்லு கிறேன்.

நீ யொரு சம வெளியாயிருப்பின் என் அலை யுடன் மல்லாடேன்;

நீயொரு சினாயாயிருப்பின் என் மின்னலை ஏற்றுப் பாரேன்.

அருந்துவதற்காக எனக்கு வாழ்வின் ஊற்று அளிக்கப் பட்டிருக்கிறது.

---

★ ஓமன் - உம்மான், எமென் தேசத்தில் ஓடும் ஒரு பெரும் நதியாகும்.

வாழ்வின் இரகசியம் தேர்ந்த வல்லுனனாய நான் ஆக்கப்பட்டிருக்கிறேன்.

புழுதியின் துகளும் எரியும் என் கீதத்தால் வலி யூட்டப்பட்டது.

அது சிறகை விரித்து அடித்து அனற் பொறி அன்ன மின் மினியாகியது.

நான் கூறப்போகும் இரகசியத்தை எவரும் உரைத் ததுமில்லை.

அல்லது என்னது போன்ற ஒரு சிந்தனை முகத்தைக் கோத்ததுமில்லை.

வருவாயாக, நீ அழியாப் பெரு வாழ்வின் இரகசிய மதை அறிய விரும்பினால்!

வருவாயாக, நீ மண்ணையும் விண்ணையும் வெல்ல விரும்பினால்!

விண்ணாக குரு பயிற்றினார் எனக்கு இக்கல்வியை.

நான் அதனை என் தோழர்களிடமிருந்து மறைக்க முடியாது.

ஓ, மது பரிமாறுபவனே! எழுந்து கிண்ணத்துள் மதுவைச் சொரியேன்.

என் உளத்திலிருந்து காலத்தின் துயரைக் களைந் தெறியேன்!



'ஐம் ஜமி'*லிருந்து பெருகி வழியும் ஒளிரும் சாரத்தை இரப்பவன் ஒருவன் பரவினால் அவன் அவனி புரக்கும் அரசனாய் ஆகிவிடுவானே.

அது சிந்தனையை அதிக அமைதியும் அறிவும் கொண்டதாய் ஆக்கிடுமே..

கூரிய விழியையும் அதிகக் கூரியதாகவே மாற் றிடுமே,

அற்பத் துரும்பிற்கு மலையின் கனத்தை அளித் திடுமே.

நரிகளுக்கோ அரிகளின் வலியை வழங்கிடுமே.

புழுதியின் துகளை வானத்து மீனிடம் அளித் திடுமே.

நீரின் துளியொன்றை நீள் கடலின் பரப்பிற்கு விரியச் செய்திடுமே.

மௌனத்தை இறதித் தீர்ப்பு நாளின் ஓலமாய் மாற்றிடுமே.

குறும்புள்ளின் சிறுதாளதனை வலிமிகு வைரியின் உதிரம் கொண்டு குருதி வண்ணம் கூட்டிடுமே.

எழு, என் கிண்ணம் நிறையக் கனிச் சாற்றைச் சொரிவாய்.

என் சிந்தனையின் கரும் இரவினுள் பால் நிலவின் பிழம்பைப் பொழிவாய்.

★ ஜம்ஜம்' - மக்காவிலுள்ள புனிதக் கிணறு.

அலைந்து திரிபவனை நான் என் இல்லிற்கு அழைத்துச் சென்று

பராக்கில் திரிபவனை ஒய்வில்லா பொறையின்மை கொண்டு உணர்வூட்டலாம் என்று;

மேலும் ஒரு புதிய தேடுதலில் நான் துரிதமாய் முன்னேறலாம் என்று.

மேலும் நான் புத்துணர்வின் தலைவனாய் விளங்க லாம் என்று.

மேலும் நான் விழிக்க விளக்கம் தரும் கண்ணின் மணியைப் போன்று அகப்பார்வையுள மக்களுக்கு ஆகலாம் என்று,

மேலும் நான் ஒரு குரலைப் போல் வையத்தின் செவியுள் மூழ்கலாம் என்று;

மேலும் நான் கவித்துவத்தின் மதிப்பதனை உயர்த்தி விடலாம் என்று.

மேலும் நான் காய்ந்துலர்ந்த மூலிகைச்* செடி மீது என் விழி நீரை வாரிச் சொரியலாம் என்று!

ரூமி குரு** மகானின் மேதையால் உணர்வூற,

---

★ மூலிகை விற்போர் எடை அதிகமாவதற்காக மூலிகை மீது நீரைத் தெளிப்பர்.

★★ ஜலாலுத்தீன் ரூமி பாரசீக நாட்டு சூபிக் கவிஞர், இக்பாலின் ஞானகுரு.



நான் இரகசிய அறிவின் முத்திரையிடப்பட்ட புத்தக மதனை ஒத்திகை நடத்துகிறேன்.

அவரின் ஆன்மாவோ, கொழுந்து விட்டெரியும் உலைக்களமாகும்.

நானோ ஒரு கணம் மட்டும் ஒளிரும் கனற்பொறி போலாவேன்.

விட்டிலாகிய என்னை அவரின் எரியும் மெழுகின் திரியானது கொளுத்தி விட்டது;

அவரின் மது என்னுடைய கலசத்தை மூழ்கடித்தது.

ரூமி குரு மகான் என் மண்ணைப் பொன்னாக் கினார்.

என் சாம்பலைக் கொழுந்து விட்டெரியச் செய்தார்.

மணலின் துகள் பாலைவனத்திலிருந்து எழுந்தது.

வெயிலவனின் ஒளியை வென்று விடலாம் என்று.

நானோர் அலையாவேன், அவரின் ஆழியில் ஒய்வு கொள வருவேன்.

ஒளி உமிழ் முத்தை எனக்குரியதாய் ஆக்கிக் கொள்ளலாம் என்று.

அவரின் சீத மது மாந்தி மயங்கியிருக்கும் நான்

அவருடைய சொற்களின் மூச்சிலிருந்து உயிர் பெறுகிறேன்.

அதுவோ இரவு : என் இதயம் புலம்பி அழுதது.

இரவின் மோனம் நான் இறையிடம் முறையிடும் கதறல் ஒலியால் நிரம்பியது.

நான் அவனிடம் உலகுறும் துயர் கூறி முறையிட்டேன்.

என் கிண்ணம் வெறுமனே இருப்பதைக் கூறிப் பிரலாபித்தேன்.

இறுதியில் என் விழி மேலும் விழிப்புத்தாளா நிலையுற்றதும்,

அது களைப்பால் இடிந்து துயிலச் சென்றது.

ஆங்கு தோன்றினார் எஜமானர் உண்மையின் வார்ப்பில் உருப்பெற்றவராய்,

அவர் குர்ஆனை பாரசீக மொழியில் எழுதினார்.

அவர் கூறினார் "ஓ பைத்தியம் பிடித்த காதலனே,

காதலின் தூய கனிச்சாரம் கொஞ்சம் அருந்துவாயாக!

உன் இதய நரம்பை மீட்டி உக்கிர இசையொன்றை எழுப்புவாயாக.

மதுக் கலத்தில் உன் தலையை மோது, ஈட்டி முனைக்கெதிரே உன்றன் விழியைச் செலுத்து!

★ ஜலாலுத்தின் ரூமி அவர்கள் எழுதிய நூல் மஸ்னவி.

★★ மது - தெய்வீக வாழ்வின் இரகசியங்களைக் குறிப்பிடுவது.



உன் சிரிப்பை ஒரு நூறு பெரு மூச்சின் பிறப்பிடமாக்கு,

உன் விழி நீர் கொண்டு மக்களின் உள்ளங்களை உதிரம் சொரியச் செய்!

எத்துணை காலம் நீ மலரின் முகை போல் மௌனமாயிருக்கப் போகிறாய்?

உன் நறுமணத்தை ரோஜா மலர்போல் மலிவாய் விலைப்படுத்து!

நாவறுந்து போய் நீ வேதனையுறுகிறாய்;

புகை எழப் போடும் பூண்டைப் போல் எரி மீது உன்னை எறி.

மணியைப் போல் முடிவில் மௌனத்தை உடைத்தெறி, ஒவ்வொரு உறுப்பிலிருந்தும்

மௌன ஓலம் ஒன்றை எழுப்பு!

நீயோ எரிதழல் ஆவாய், உன் ஒளியால் உலகை நிரப்புவாயாக.

நீ எரிவதைக் கொண்டு பிறரையும் எரியச் செய்!

பழைய மது வணிகனின் இரகசியங்களை வெளிப்படுத்து;

மது*வின் அலையாய் நீயே இரு, பளிங்குக் கிண்ணமே உன் ஆடையாகட்டும்!

அச்சத்தின் ஆடியை அடித்து உடை.

★ மது - தெய்வீக வாழ்வின் இரகசியங்களைக் குறிப்பிடுவது

பளிங்குப் புட்டிகளை கடைத்தெருவின் நடுவில் போட்டு உடைத்தெறி!

புல்லாங் குழல்போல் மூங்கில் வனத்திலிருந்து செய்தியொன்றைத் தருவாயாக;

'ஹை' எனும் லைலாவின் கூட்டத்தவரிடமிருந்து செய்தியொன்றைக் கொணர்ந்து மஜ்னூனுக்குக் கூறுவாயாக!

உன் பாட்டிற்குப் புதிய முறையொன்றைக் கூட்டுவாயாக,

குத்தித் துளைக்கும் உன் இசைகளால் உன் குழுவினரை வளப்படுத்துவாயாக!

எழு, உயிர் வாழும் ஒவ்வொரு ஆன்மாவிற்கும் உணர்வளி!

'எழுவாய்!' என்று கூறு, அந்தச் சொல்லால் வாழ்வோரை விரைவாக்கு!

எழு, உன் பாதத்தை வேறொரு பாதையில் பதி;

துயர் மலி பழைய துன்பினை விலக்கி வை!

இசைபாடுவதின் இன்பத்துடன் நண்பனாகு;

ஓ, ஒட்டகைக் கூட்டத்தின் மணியே, விழிப்புறுவாயாக!"

இம்மொழிகள் என் உள்ளைக் கிளறியது.

வேய் குழல்போல் உணர்ச்சி வெள்ளம் பொங்கி வழிந்தது;

நரம்பிலிருந்து இசை சிளம்புவதைப் போல் நான் எழுந்தேன்.



செவிக்கொரு துறக்கம் அமைப்பதற்காக.

நான் அகமியத்தின் இரகசியத்தை மறைத்திருந்த திரை அகற்றினேன்.

அதன் வியத்தகு இரகசியத்தை வெளிப்படுத்தினேன்

என் ஜென்மம் முடிவுறா சிலையை யொத்திருந்தது.

(அது) அழகற்று, மதிப்பற்று எதற்குமே பயனற்று (இருந்தது).

அன்பின் உளியே என்னை அமைத்தது: நான் ஒரு மனிதனானேன்.

அண்ட கோளங்களுடைய இயல்பின் அறிவை அடைந்தேன்.

வானத்து நரம்புகளின் இயக்கத்தினை நான் பார்த்திருக்கிறேன்.

திங்களின் உதிரக் குழாய்களில் குருதி செல்லும் வழிதனை நான் கண்டிருக்கிறேன்.

பல இரவுகள் நான் மனிதனுக்காக அழுதேன்.

வாழ்வின் இரகசியத்தை மறைத்திருந்த திரையதனை கிழித்து எறிந்து விடலாம் என்று,

வாழ்க்கையமைப்பின் இரகசியத்தை வடித்தெடுத்து விடலாம் என்று.

படைப்பினங்களின் ஆய்களத்திலிருந்து

நிலவைப் போல் இவ்விரவிற்கு அழகளிக்கும் நான்.

தூய சமயமான இஸ்லாத்திற்குப் பக்தி செலுத்துவதில் ஒரு தூசித்துகள் போலாவேன்-

குன்றிலும் புல்வெளியிலும் புகழ்பெற்ற அந்தச் சமயமானது

இறவா கீதத்தின் அனற்கொழுந்தை மாந்தரின் இதயமதில் கிளறிவிடுகிறது.

அது ஓர் அணுவை விதைத்தது, ஒரு பரிதியை அறுத்தது.

அது ரூமியையும் அத்தாரையும் போன்ற ஒரு நூறு கவிஞர்களை அறுவடை செய்தது.

நான் ஒரு கதகதப்பான பெருமூச்சாவேன் : வானங் களுக்கு நான் ஏறுவேன்;

நான் ஒரு புகைதான், என்றாலும் நான் நெருப்பி லிருந்து குதித்திருக்கிறேன்.

உயர்ந்த சிந்தனைகளால் உந்தப்பட்டு என் எழுது கோல்,

இத்திரையின் பின்புறமிருந்து இரகசியத்தை வெளியே வீசி எறிந்தது.

துளியானது ஆழியை நிகர்த்ததாய் ஆகலாம் என்று.

மணலின் துகளானது ஒரு சகாராப் பாலையாய் விரியலாம் என்று.

இந்த மஸ்னவியின் குறியோ கவிதை இயற்றுவது அன்று.

அழகைப்பரவுதலும் காதல் செய்தலும் அதன் குறியல்ல.

நான் இந்தியாவைச் சார்ந்தவன். பாரசீக மொழிக்கு நான் அன்னியனே.



நான் இளம்பிறை போலாவேன். என் கிண்ணம் இன்னும் நிரம்பவில்லை.

விஷய விளக்க நடையின் கவர்ச்சியை விவரமாய் என்னிடமிருந்து தேட வேண்டாம்:

கான்சாரையும் இஸ்பஹானையும்* என்னிடமிருந்து எதிர்பார்க்க வேண்டாம்.

இந்துஸ்தானத்தின் மொழி சர்க்கரைபோல் இனிமை யானதாயிருந்த போதிலும்,

அதினினும் இனிமையாயிருக்கிறது, பாரசீக மொழி யின் பாங்கு.

அதன் அழகால் என் சிந்தனை மயக்கப்பட்டு விட்டது.

என் எழுதுகோலே 'எரிபுதரின்' குச்சி போலாகி விட்டது.

என் கருத்துக்களின் உயர்விற்கு,
பாரசீக மொழியொன்றே ஏற்றதாகும்.

ஓ விழிப்புற்றவனே! மதுக்கிண்ணத்தில் குறை காண வேண்டாம்.

ஆனால் மனத்தை கவனமாய் மதுவின் சுவையில் இலயிக்கச் செய்வாயாக.

* *

---

★ கான்சார், இஸ்பஹான்- பாரசீக நாட்டு இருபெரும் நகரங்கள். இவற்றில் இருபெரும் கவிஞர்கள் தோன்றியுள் ளனர்.

## 2

அகமியம் என்பது அசாதாரண வலிமை வாய்ந்தது. அதிலிருந்தே பிரபஞ்சமே பிறந்தது. அதனை வலிமைப்படுத்துவதே உயிர்களின் வளர்ச்சிக்கு உகந்ததாகும் என்கிறார் அல்லாமா இக்பால் இந்த அத்தியாயதில். தன்னையே அழித்து அணுவாவதும் அதுவே, அணுக் களைச் சேர்த்து தலையாக மாறுவதும் அதுவே என்றும் அதிலிருந்து வாழ்க்கை வலிமை சேர்க்கும்போது வாழ்வின் ஆறு விரிந்த கடலாய் மாறுகிறது என்றும் கூறுகிறார்.

இருத்தலின் அமைப்பு அகமியத்தின் பலனாகும்.

நீ காணும் யாதும் அகமியத்தின் இரகசியம் தான்.

அகமியம் நினைவுற்று எழுந்தபொழுது,

அது எண்ணத்தின் பிரபஞ்சத்தை வெளிப்படுத் தியது.

அதன் சாரத்தில் ஒரு நூறு உலகங்கள் மறைந் திருக்கின்றன.

அகத்தின் உண்மையை நிறுத்துதல் அகமின் மையை வெளிச்சத்திற்குக் கொணர்கிறது.



அகமியத்தால் தான் எதிர்ப்பின் வித்து வையத்தில் விதைக்கப்பட்டிருக்கிறது:

அது தன்னினும் வேறொன்றாயிருப்பதாய்த் தானே கற்பனை செய்கிறது.

அது தன்னிலிருந்தே பிறவற்றின் உருவங்களை அமைக்கிறது,

(எதற்கெனில்) பிணக்கின் இன்பத்தைப் பெருக்கு வதற்காக.

அது தன் கரத்தின் உரத்தாலேயே கொன்று கொண டிருக்கிறது,

தன் வலிமையை உணர்ந்து கொள்ளலாம் என்று.

அது தன்னையே ஏமாற்றிக் கொள்ளுபவைதான் வாழ்வின் சாரமாயிருக்கின்றன;

ரோஜா மலரைப்போல் அது தன்னைக் குருதியில் குளிப்பாட்டிக் கொள்ளுதலாலே உயிர் வாழ்கிறது.

ஒரேயொரு ரோஜா மலருக்காக அது ஒரு நூறு ரோஜா வனங்களை வீணாக்குகிறது.

ஒரேயொரு கீதத்திற்காக அது ஒரு நூறு ஓலங்களை இடுகிறது.

ஒரு வானிற்காக அது ஒரு நூறு மதியங்களை தோற்றுவிக்கிறது.

ஒரு சொல்லிற்காக அது ஒரு நூறு உரையாடல்கள் (நிகழ்த்துகிறது)

இந்த விரயத்திற்கும் கொடுமைக்கும் கூறப்படும் சமாதானம்,

ஆன்மீக அழகிற்கு உருவம் வழங்கி முழுமை தருவதுவாம்.

*ஷீரீனின் அழகால் பர்ஹாத் உளத்துயருறுவது நியாயம் தான்.

மணமிக்க ஒரு கொப்பூழுக்காக ஒரு நூறு கத்தூ மான்களைக் கொல்வது நியாயம்தான்.

தீக்கொழுந்தில் விழுந்து அழிவதே விட்டிலின் விதியாகும்.

விட்டிலின் வேதனையானது மெழுகுவர்த்தியால் நியாயமெனப்படுகிறது.

அகமியத்தின் எழுதுகோள் ஒரு நூறு இன்றைய தினங்களை ஓவியம் தீட்டியது.

ஒரேயொரு நாளைய தினத்தின் உதயம் பெறுவதற்காக.

அதன் தீக்கொழுந்துகள் ஒரு நூறு இப்ராகீம்*களை உண்டன.

ஒரு முகம்மதின் ஒளிவிளக்கு ஏற்றப்படலாம் என்று.

---

★ பர்ஹாதின் காதலி.

★★இப்ராகீம்- ஒரு தீர்க்கதரிசி அவர்களை நம் ரூத் என்பவன் நெருப்புக் குண்டத்துள் தூக்கிப் போட்டான். அது ஒரு மலர்க்காவாகிவிட்டது.



விஷயம், நோக்கம், வழிகள், காரணங்கள்-

இவையனைத்தும் செயலுக்காக வேண்டி அது மேற்கொண்டிருக்கும் அமைப்புகள் ஆகும்.

அகமியம் எழுகிறது, கிளறுகிறது. விழுகிறது, ஒளிர்கிறது, மூச்செறிகிறது,

எரிகிறது, சுடர்விடுகிறது, நடக்கிறது, பறக்கிறது,

காலத்தின் விசாலமே அதன் அரங்கமாகும்.

விண்ணகம் அதன் சாலையின் மீது புறளும் புழுதியின் பேரலையாம்.

அதன் ரோஜா வனத்திலிருந்தே இவ்வுலகில் ரோஜா மலர்கள் குவிந்துள்ளன.

இரவு, அதன் உறக்கத்திலிருந்தே பிறக்கிறது, பகல் அதன் விழிப்பிலிருந்தே பாய்ந்தெழுகிறது.

அது தன் அழற்கொழுந்தை அனற்பொறியாகப் பிரித்துவிட்டது.

(இவ்வாறு பிரிந்த) பகுதிகளைப் பரவிட அறிவிற்குப் பயிற்றியது.

அது தன்னையே உருக்கி அணுக்களாக்கியது.

அது சற்று நேரம் சிதறி மணற்றுகளாய் மாறியது.

பிறகு அது, இவ்வாறு கலைத்ததில் களைப்படைந்தது.

அது தன்னையே ஒரு சேரப் பிணைத்துக் கொண்டு மலைகளாக மாறியது.

அகமியத்தின் இயல்பு தன்னையே துலக்கிக் கொள்வதாகும்.

ஒவ்வொரு அணுவிலும் அகமியத்தின் வலிமை துயில்கிறது.

வெளிப்பட்டும், உயிர்ப் பற்றும் இருக்கும் வலிமையே செயல்புரியச் செலும் உளவலிமைகளுக் குத் தளையிடுகிறது.

அகமியத்தின் வலியிலிருந்து பிரபஞ்சத்தின் உயிர் வரும் அளவு

வாழ்க்கையானது, இவ்வலிமைக்கு விகிதாசார மாகிறது.

நீர்த்துளியொன்று அகமியத்தின் பாடத்தை மனத் தில் வரப்படுத்தும் பொழுது

அது தன் மதிப்பறு நிலையை ஒரு தரளமாக்குகிறது.

மதுவுக்கு உருவமிலை, ஏனெனில் அதன் அகமியம் பலவீனமானது.

கிண்ணத்தின் தயவினால்தான் அது ஓர் உருவைப் பெறுகிறது.

கிண்ணத்தின் மது ஓர் உருவை மேற்கொள்ளினும்,

அதன் அசைவிற்கு நமக்கே அது கடன்பட்டிருக் கிறது.

மலை தன் அகமியத்தை இழக்கும்போது அது மணல்துகள்களாய் மாறுகிறது.



திரைகடல் தன்மீது மோதுவதாய்க் குறைகூறுகிறது

அலையானது ஆழியின் மடியில் ஓர் அலையாய் நிலைக்கும் காலம் வரை,

அது திரைகடலின் முதுகில் ஏறி ஊரும் ஒன்றாய்த் தன்னை ஆக்கிக் கொள்ளுகிறது.

ஒளி, தன்னை ஒரு விழியாய் மாற்றிக் கொண்டு,

அழகைத் தேடி அங்குமிங்கும் அலைந்து திரிந்தது.

புல் தன் அகமியத்தின் உள்ளே வளர்ச்சியின் வழி களைக் கண்டபொழுது,

அதன் துணிவு மலர்க்காவின் நெஞ்சத்தைப் பிளக் கிறது.

மெழுகுவர்த்தி கூடத் தன்னையே இணைத்துக் கொண்டு

அணுக்களால் தன்னை அமைத்துக் கொண்டது.

பிறகு அது தன்னை உருக்கிக் கொண்டுத் தன் அகமியத்திலிருந்து விரையும் ஒரு வழக்கை மேற் கொண்டது.

இறுதியில் அது கண்ணீர்த் திவலை போல் தன் விழியிலிருந்துத் துளியாய்க் கீழே விழும் வரையில்.

விளிம்பு இயல்பிலேயே அதிகம் காப்புடன் இருந் திருக்குமானால்

அது காயங்கள் பெற்றிருக்காது.

ஆனால் அது புறவாசகத்திலிருந்தே தன் மதிப் பதனைப் பெறுவதனால்,

அதன் தோள் பிறரின் பெயரின் பாரத்தால் புண்ணாகியிருக்கிறது.

ஏனெனில் மண்ணானது அதன்மீதே உறுதியாய் நிறுத்தப்பட்டிருக்கிறதனால்,

அடிமைத் திங்களும் என்றும் அதனையே சுற்றிச் சுழன்று வருகிறது.

பரிதியின் உட்பொருள் மண்ணகத்தின் உட்பொருளினும் மிகவும் வலிமை மிக்கதாகும் :

எனவேதான் வெய்யிலவனின் விழி (எழில்) கண்டு மண்ணகம் கிறுகிறுக்கிறது.

சிவந்த பீச் மரத்தின் ஒளி நம் பார்வையைப் பற்றி நிறுத்துகிறது.

அதன் பெருமையால் மலைகள் மிக வளமுறுகின்றன:

அதன் ஆடையோ நெருப்பால் நெய்யப்பட்டிருக்கிறது.

அதன் மூலம் தன்னை நம்பிய வித்தொன்றுதான்.

வாழ்க்கை, அகமியத்திலிருந்து வலி சேர்க்கும் பொழுது,

வாழ்வின் ஆறே பெருங் கடலாய் விரிவடைந்து விடுகிறது.

* *

# 3

வாழ்கைக்கு ஒரு நோக்கம் வேண்டும், ஒரு குறிக்கோள் வேண்டும். அந்தக் குறிக்கோளை அடைய மனிதன் விரும்ப வேண்டும். அந்த விருப்பத்தை நிறைவேற்ற மனிதன் முயலவேண்டும். நமக்கு வேண்டியதை ஆண்டவன் அறிவான் என்று சோம்பி இருக்கக் கூடாது. இந்தக் கருத்துக்களையே இந்த அத்தியாயத்தில் விளக்குகிறார் இக்பால். மனிதன் புரிந்த சாதனைகள் அனைத்தும் ஒரு காலத்தில் மனிதனின் விருப்பங்களாக இருந்தவை தான். அந்த விருப்பங்கள் தாம் விரிந்து சாதனைகளாக மலர்ந்திருக்கின்றன.

வாழ்க்கை நோக்கால் ஓம்பப்படுகிறது :

குறிக்காக, ஒட்டகக் கூட்டத்தின் மணி ஒலிக்கிறது.

வாழ்வு, தேடுதலில் மறைபொருளாயுள்ளது.

அதன் மூலமோ விருப்பில் ஒளிந்திருக்கிறது.

விருப்பத்தை உன் இதயத்தில் உயிருடன் வைத்துக் காப்பாய்,

இலையேல் உன் சிறு புழுதித்துகள் ஒரு கல்லறையாக மாறிவிடும்.

நிறமும் நறுமணமும் வாய்ந்த இவ்வுலகின் ஆன்மாவே விருப்பம் தான்.

அனைத்தின் இயல்பும் விருப்பத்தின் உறைவிடமே.

விருப்பம்தான் இதயத்தை நெஞ்சத்தில் கூத்தாட இயக்குகிறது.

அதன் சுடரால்தான் நெஞ்சம் கண்ணாடி போல் ஒளிர்கிறது.

அது மண்ணிற்கு உயர ஏறும் உரத்தை அளிக்கிறது.

புலப்படும் மூசாவுக்கு அது ஒரு 'கிளிர்' ஆகும்.

விருப்பின் நெருப்பிலிருந்தே இதயம் உயிர் பெறு கிறது.

அது உயிர் பெற்றதும் உண்மையில்லா அனைத்தும் உயிர் துறக்கின்றன.

அது விருப்புக் கொளாது விலகியிருக்கும்பொழுது

அதன் சிறகு சிதைகிறது, அதனால் உயரப் பறக்க இயலுவதில்லை.

விருப்பமே அகமியத்தை மாறாப்பெரு முழக்கத்தில் நிறுத்துகிறது.

அதுவே அகமிய ஆழியின் ஒய்வொழி அலையாகும்.

இலட்சியங்களைப் பிடிப்பதற்கு விருப்பமே (சுருக் கிடும்) பொறியாகும்,

அதுவே செயல்களின் நூலைச் சேர்த்திணைப்பதாம்

விருப்பமின்மை வாழ்வோர்க்கு இறப்பாகும்.

வெப்பமின்மை வாழ்வோர்க்கு இறப்பாகும்.

வெப்பமின்மை அனற் கொழுந்தை அவித்துவிடு வதைப் போல்.

விழிப்புடனிருக்கும் நம் கண்ணின் பிறப்பிடம் யாது?

காண்பதில் நாம் பெறும் இன்பமே பார்வைக்குப் புலப்படும் அமைப்பை அடைந்திருக்கிறது.



கவுதாரியின் பாதம் அதன் பெருமித நடையிலிருந்து பிறந்திருக்கிறது.

குயிலின் அலகோ பாடுவதற்கு அது கொண்ட முயற்சியிலிருந்து (அமைந்திருக்கிறது).

வனத்திலிருந்து அகன்ற மூங்கிலே களிப்பெய் தியது.

இசையும் அதன் சிறையிலிருந்து விடுவிக்கப் பட்டது!

புதியன காணவும் விண்ணகம் அளக்கவும் முயலும் மனத்தின் சாரம்தான் என்ன?

இவ்வற்புதம் செய்வது எது என்று உனக்குத் தெரியுமா?

விருப்பே வாழ்வை வளப்படுத்துகிறது,

அறிவு அதன் கருப்பையின் குழந்தைதான்.

சமூக அமைப்புக்கள், வழக்கங்கள், சட்டங்கள் யாவை?

அறிவியல் புதினங்களின் இரகசியம் யாது?

தன் சொந்த வலிமையாலேயே நிறைவேற்றிக் கொள்ளப்பட்ட ஒரு விருப்பம்

இதயத்திலிருந்து வெடித்துக் கிளம்பி உருவம் எடுத்தது.

மூக்கு, கை, மூளை, விழி, செவி, சிந்தனை, கற்பனை, உணர்ச்சி, நினைவு, அறிவு-

இவையனைத்தும் தன்னையே காத்துக் கொள்ளு வதற்காக வாழ்க்கை அமைத்துக் கொண்ட கருவிகளாகும்,

அதன் முடிவுறாப் போராட்டத்தில்.

அறிவியல், கலை இவற்றின் நோக்கம் அறிவன்று,
காவின் நோக்கம் மொக்கும் மலருமல்ல.

வாழ்வை ஓம்ப (பேணிக்காக்க) அறிவியல் ஒரு கருவி யாகும்.

அகமியத்திற்கு வலியூட்ட அறிவியல் ஒரு முறையாம்.

அறிவியலும் கலையும் வாழ்வின் ஊழியராவர்.

அதன் இல்லத்திலே பிறந்து வளர்ந்த அடிமைகளாவர்.

எழு! ஓ வாழ்வின் இரகசியத்திற்குப் புதியவனாயிருப் பவனே,

எழுவாயாக ஒரு லட்சியத்தின் மது மாந்திப் போதை யுற்று.

உதய ஒளிபோல் ஒளிரும் ஓரிலட்சியம்

இறைவனைத் தவிர்த்து மற்றவையனைத்திற்கும் எரியும் பெருந்தீயாகும்.

விண்ணகத்திலும் உயர்ந்த ஓரிலட்சியம்

மாந்தரின் இதயங்களை வெல்கிறது, அடிமை கொள்ளுகிறது, கவர்ந்து இழுக்கிறது;

பண்டைப் பொய்மைகளை அழிக்கும் ஒன்று,

துன்பம் நிரம்பி, இறுதி நாளின் ஓர் உருவமாகவே ஆகிறது.

இலட்சியம் கொள்ளுவதாலேயே நாம் உயிர் வாழ் கிறோம்.

விருப்பமெனும் கதிரொளியில் நாம் சுடர் விடு கின்றோம்!

**

# 4

அல்லாமா அவர்கள் அன்பு எங்ஙனம் அகமியத்தை வலுப்படுத்துகிறது என்று விளக்குகிறார். இறைவன் தூதரிடம்தான் நம் விமோசனமிருக்கிறது என்று வலியுறுத்துகிறார். அவர்கள் மீது நாம் கொண்டிருக்கும் அன்பே நமக்கு எல்லாமாகும் என்று கூறுகிறார். இறுதி யில் முஸ்லிம்களுக்குள் வேறுபாடு கிடையா தென்றும் அவர்கள் எங்கிருந்தாலும் ஒருவர் தாம் என்றும் கூறி முஸ்லிம்கள் இவ்வுலகில் ஆண்டவனின் பிரதிநிதியாயிருக்க அவன் அருள்புரிய வேண்டுமென இறைஞ்சுகிறார்.

ஒளிப்புள்ளியின் பெயரே அகமியம்

நம் தூசியின் கீழ்தான் உயிர்ப் பொறியுளது.

அன்பினால் அது நீடுநிலைக்குமாறு ஆக்கப் பெற்றி ருக்கிறது,

நீடு வாழுமாறு, நீடு எரியுமாறு, நீடு ஒளிருமாறு ஆக்கப் பெற்றிருக்கிறது.

அதன் உட்பொருளின் ஒளிப்புனல் அன்பிலிருந்தே புறப்படுகிறது.

அறிந்திரா அதன் தன்மைகளின் விருத்தியனைத்தும் அன்பிலிருந்தே (புறப்படுகிறது).

அதன் இயல்பு அன்பிலிருந்து எரியைத் திரட்டுவது.

வையத்தை ஒளிரச் செய்யுமாறு அன்பு அதற்கு அறிவிக்கிறது.

அன்பு, வாளுக்கோ, கத்திக்கோ அஞ்சக்கூடியதன்று

அது நீரிலிருந்தோ, வளியிலிருந்தோ, மண்ணிலிருந்தோ பிறக்கவில்லை.

உலகில் அமைதியையும், அமரையும் உண்டுபண்ணுவது அன்புதான்.

அன்பே வாழ்வின் ஊற்றாகும்; அதுவே இறப்பின் சுடர்வாளாம்.

அன்பின் பார்வையில் மிகக் கடினபாறைகளும் பிளந்துவிடுகின்றன.

இறையன்பு இறுதியில் முற்றும் இறையாகவே ஆகிறது.

நேசிக்க நீ பயின்று தோழன் ஒருவனைத் தேடிப் பிடிப்பாய்.

நூஹ்வின் விழி போன்ற ஒரு வழியை, அய்யூபின் இதயம் போன்ற ஓர் இதயத்தைத தேடுவாய்!

உன் கையளவு மண்ணைக் கனகமாய் மாற்றுவாய்.

நிறைவுறு மனிதர் ஒருவரின் வாயிற்படியை முத்தமிடுவாய்.

ரூமியைப்போல் உன் மெழுகுவர்த்தியை ஏற்றுவாய்.

தப்ரீஸின் நெருப்பில் ரூமை எரிப்பாய்.

உன் உள்ளின் உள்ளே, ஆங்கோர் அன்பன் மறைந்திருக்கிறான்,

பார்க்கும் விழிகள் உனக்கு இருக்குமானால் அவனை உனக்கு நான் காண்பிப்பேன்.

அவனுடைய காதலர்கள் அழகானவரினும் மிக அழகானவராவர்.



இனிமை மிகுந்தவர், வனப்பு நிறைந்தவர், அன்பு மிகவும் அதிகமானவர் ஆவர்,

அவர் மீதுள்ள அன்பினால் தான் இதயத்திற்கே உரமேற்படுகிறது.

மண்ணகம் தாரகைகளுடன் தோள்கள் தேய்க்கிறது.

அவர் அருளால் நஜ்தின் மணல் துரிதமானதாயிற்று.

பெருமகிழ்வில் வீழ்ந்து வாகனங்களுக்கு எழுந்தது.

முஸ்லிமின் உள்ளத்துள்ளேதான் முகம்மதின் இல்லமிருக்கிறது.

நம் புகழ் எல்லாம் அவரின் பெயரிலிருந்துதான்.

சினாயானது அவரின் மனையின் தூசியின் சுழற்காற்றுத்தான்.

அவர் வாழுமிடமோ கஅபாவிற்கே ஒரு புண்ணியத் தளமாகும்.

நித்தியத்துவமென்பது அவருடைய கால அளவில் ஒரு கணத்திற்கும் குறைந்ததே,

நித்தியத்துவம் அவரின் சாரத்திலிருந்தே பெருக்கம் பெறுகிறது.

அவர் ஓர் ஈச்சம் பாயின்மீது உறங்கினார்.

ஆனால் அவரைப் பின்பற்றியவர்களின் தாளின் கீழே குஸ்ரூக்களின் மணிமுடி கிடந்தது.

அவர் ஹிரா மலையின் இரவின் தனிமையைத் தேர்ந்தார்.

அவர் ஒரு சமுதாயத்தை, சட்டங்களை அரசாங்கத்தை அமைத்தார்.

துயில் மறந்த விழிகளுடன் அவர் பல இரவுகளைக் கழித்தார்.

பாரசீகத்தின் அமளிமிசை முஸ்லிம்கள் உறங்கலாம் என்பதற்காக.

அமரின் வேளையில் அவரின் வாளின் ஒளியால் இரும்பும் உருகியது.

வணக்கத்தின் வேளையிலோ அவரின் விழியிலிருந்துக் கண்ணீர் மழைபோல் சொரிந்தது.

இறையுதவியை வேண்டி அவர் வணங்கிடும் போழ்தோ அவரின் வாள் ''ஆமின்'' (ஆகட்டும்) கூறியது.

அதுவே அரச பரம்பரையின் வேரறுத்தது.

அவர் உலகில் புதிய சட்டங்களை அமைத்தார்.

தொன்மையான பேரரசுகளுக்கு அவர் இறுதி கொணர்ந்தார்.

சமயத்தின் சாவி கொண்டு அவர் இவ்வகிலத்தின் கதவினைத் திறந்தார்.

அவர் போன்றவரை அவனியின் கருப்பை என்றுமே ஈன்றதில்லை.

அவரின் கண்முன் உயர்ந்தவர் தாழ்ந்தவர் இருவரும் ஒன்றுதான்.

அவர் தம் அடிமையுடன் அமர்ந்து ஒரே விரிப்பில் உணவுண்டார்.

தையின் தலைவனுடைய மகள் போரில் சிறைப் பிடிக்கப்பட்டாள்.



அந்தப் பெருமை நிறை திருமுன்னர் கொணரப் பட்டாள்.

அவள் தாள்களிலோ தளை முகத்திலோ திரையிலை;

அவளின் பிடரி அவமானத்தால் வளைந்திருந்த நிலையில்

இறைவன் தூதுவர் அப்பேதைப் பெண் முகத்திரையின்றி இருப்பதைக் கண்டதும்,

அவளின் முகத்தைத் தம் மேலாடை கொண்டே மறைத்தார்கள்.

அந்தத் 'தை'யின்* பெண்ணினும் நாம் அதிகம் நிர்வாணமாயிருக்கின்றோம்.

உலக மக்களின் முன் முகத்திரையின்றி நாம் நிற்கிறோம்.

அவரிடமே நியாயத் தீர்ப்பு நாளின் போழ்து நம் நம்பிக்கையெல்லாம்,

இந்த உலகிலும் கூட அவரே நம்முடைய பாதுகாவலாவார்.

அவரின் தயையும், சினமும் இரண்டுமே முற்றும் ஒரு கருணைதான்.

நண்பர்க்கொரு கருணையாகும் அது பகைவர்கொரு கருணையாகும் இது.

---

★ ஹாதிம் மாபெரும் கொடைவள்ளல் இவர்தான் தை எனும் இனத்தவரின் தலைவராவார்.

தம் கருணையின் வாயில்களைத் தம் பகைவர்க்கும் அவர் திறந்துவிட்டார்.

''உங்கள்மீது ஒரு தண்டனையும் விதிக்கப்படாது,'' என்பதே அவர் மக்காவுக்கு விடுத்த செய்தியாகும். *

நாட்டின் தளைகளை அறியாத நாம்

இருவிழிகளில் ஒளியிருப்பினும் ஒன்றாயிருக்கும் பார்வையை ஒத்திருக்கின்றோம்.

ஹிஜாசையும், சீனாவையும் பாரசீகத்தையும் சேர்ந்த வராவோம் நாம்,

என்றாலும் நாம் சிரித்தெழும் உதயம் ஒன்றின் பனித்துளிதான்.

நாமனைவருமே மக்காவிலிருந்து மதுக்கலம் அமர மரவை தாங்கி வருபவருடைய விழிச்சுடரின் அடிமையா யுளோம்.

நாம் கிண்ணமும் கனிச்சாரமும் போல் இணைந்திருக் கிறோம்.

அவர் இன வேறுபாடுகளை கொளுத்தித் தூய்மைப் படுத்தினார்,

அவரின் நெருப்பு குப்பை குவியல்களை எரித்துச் சாம்பராக்கிறது.

★ மக்கத்து வங்காபிர்கள் நபிகள் பெருமானாருக்க சொல்ல முடியாத் தொல்லைகள் தந்து மக்காவை விட்டும் வெளி யேற்றினர். அத்தகைய அண்ணலார் வெற்றிகண்டு வெற்றி யாளராக மக்காவிற்குள் புகும்போது பழிவாங்கும் முழுச் சக்தி பெற்றிருந்தும் ''இன்று உங்கள் மீது ஒரு தண்டனை யும் விதிக்கப்பட மாட்டாது'' என்று கூறி மன்னித்து விட்டதை இது குறிப்பிடுகிறது.



காம்புகள் பலவாயினும் மணம் ஒன்றாயிருக்கும் ரோஜா மலர்போல்வோம் நாம்.

இந்தச் சமூகத்தின் ஆன்மா அவர்தாம், அவரும் ஒருவரே.

நாம் அவரின் இதயத்தில் மறைந்திருக்கும் இரகசியம் ஆவோம்,

அச்சமின்றி அவர் பேசினார் நாம் வெளிப்படுத்தப் பட்டோம்.

அவர் மீதுள்ள அன்பின் பெருக்கால் இசைக்கப்படும் கீதம் என்மோன வேய் குழலை நிரப்புகிறது,

ஒரு நூறு பண்கள் என் நெஞ்சில் மோதுகின்றன.

அவர் எத்தகு பக்தியை உண்டாக்குகிறார் என்று நான் எவ்வாறு கூறுவேன்?

உலர்ந்த ஒரு மரத்துண்டு* கூட அவரிடமிருந்து பிரியும்போழ்து அழுது புலம்பியதே!

முஸ்லிமின் உள்பொருளானது, அவர் தம் புகழை வெளிப்படுத்தும் இடமாக இருக்கிறது:

அவரின் பாதையில் உள்ள புழுதியிலிருந்து சினாய்கள் பல துள்ளி எழுகின்றன.

அவரின் கண்ணாடியிலேதான் என் உருவமே அமைந் திருக்கிறது.

★ நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் நின்று பிரசங்கம் செய்த மேடை அவர்களைப் பிரிந்தபோது அழுததாய்க் கூறுவர்.

அவருடைய நெஞ்சத்து பரிதியிடமிருந்தே என் உதயமே எழுகிறது,

என்னுடைய இளைப்பாறுதலோ இடையறா சுரம்தான்,

என் மாலை நியாயத் தீர்ப்பு நாளின் காலையினும் மிகுவெப்பமுள்ளதாகும்.

அவரோ ஏப்ரல் மாத (இளவேனில் கால) முகிலாவார், நானோ அவரின் காவாவேன்,

அவரின் மழையால் என் திராட்சைக் கொடிகள் நனைந்து குளிர்ந்திருக்கின்றன.

நான் காதலின் களத்தில் என் விழியை விதைத்தேன்;

காட்சியெனும் கதிரை அறுத்தேன்.

''ஈருலகினும் இனிமை மிகுந்தது மதினாவின் மண்;

ஓ அன்பர் வதியும் அந் நகரே களி நிறைந்ததாம்!''

முல்லா ஜாமியின் நடையைப் பாராட்டுவதில் நான் வசமிழந்து விட்டேன்;

அவரின் கவிதையும் உரைநடையும் என் முதிரா நிலைக்கோர் பரிகாரமாகும்.

கவினுறு கருத்துக்கள் நிரம்பி வழியும் பாக்களை அவர்யாத்திருக்கிறார்.

எஜமானைப் புகழ்ந்து ஒளி முத்துக்களை அவர் கோத்திருக்கிறார்-

அண்ட கோலமெனும் நூலுக்கு முகவுரையே முஹம் மதவர்கள் தாம்;



அவனிகள் அனைத்தும் அவரின் அடிமையாகும், அவரோ அவற்றின் எஜமானர் ஆவார்;

காதலின் கனிச்சாறிலிருந்தே ஆண்மீகப் பண்புகள் எழும்புகின்றன;

காதலின் தன்மையில் ஒன்றாமே கண்மூடிப் பணி தலுமே.

பிஸ்தாமின் முனிவர் பூரணப் பணிதலில் (பக்தியில்) தனியானவர்.

ஒரு நீர் வெள்ளரியை* அருந்துவதையும் அவர் தவிர்த்துக் கொண்டார்!

அன்பரிடம் அனவரதமும் பக்தி செலுத்தும் காதலனா யிரு,

(இருப்பின்) நீ இறையையே கைப்பற்றிவிடலாமே.

இதயத்தின் ஹிராவில்** சற்று நேரம் இளைப்பாறத் தங்குவாய்,

அகமியத்தை விட்டுவிட்டு ஆண்டவனிடம் ஓடு!

இறைவனால் உரமூட்டப்பெற்று உன் அகமியத் திற்குத் திரும்பி வா!

இழிவான இச்சைகளெனும் (தொழு உருவங்களான) லாத், உஸ்ஸாக்களின் தலைகளைத் தகர்த்தெறி

---

★ நீர் வெள்ளரியை நபிகள் நாகம் (ஸல்) அருந்தினார்களா இல்லையா என்பது தெரியாததால் அவர் நீர் வெள்ளரியை அருந்த மறுத்துவிட்டார்.

★★ மக்கம் அருகிலுள்ள ஒரு மலை. இங்குதான் வானவர்கோன் ஜிப்ரீல் முதன் முதலாக நபிகள் நாயகம் முன் தோன்றினார்.

அன்பின் வலியால் படையொன்றைத் திரட்டுவாய்,

அன்பின் பாரான் மீது உன்னையே வெளிப்படுத்திக் கொள்ளுவாய்,

கஅபாவின் காவலன் உனக்குத் தயை புரியட்டும்.

"நான் மண்ணகத்தில் ஒரு பிரதிநிதியை நியமிப் பேன்."

(என்பதின்) உண்மைப் பொருளாய் உன்னை ஆக்கட்டும்.

* *

5

இரப்பது மிகவும் இழிவானது, அது அகமியத்தை அழித்துவிடுகிறது. அலைகட லின் நடுவில் தனித்து அகப்பட்டுக் கொண்ட நிலையிலும் நீர்க்குமிழிபோல் ஒருவனுடைய பாத்திரம் கவிழ்ந்தே இருக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார் அல்லாமா இக்பால் இந்த அத்தியாயத்தில். சிங்கத்திடமிருந்து வரி வசூ லித்த பெரும் பாரம்பரியம் உன்னுடையது. எனவே அந்தப் பாரம்பரியத்திற்கு இழிவு நேரி டாமல் நடந்து கொள் என்று முஸ்லீம்களைக் கேட்டுக் கொள்ளுகிறார்.

ஓ, நீயோ அரிமாவிடமிருந்து வரி வசூலித்திருக் கிறாய்,

(ஆனால்) உன் தேவைகளால் நீ குணத்தில் இயல் பில் ஒரு நரியாக ஆக்கப்பட்டிருக்கிறாய்.

உன் பிணிகளுக்குக் காரணம் வறுமை.

உன் வேதனைக்குக் காரணம் உன் பிணிகளாகும்.

அதுவே உன்னுடைய உயர்ந்த எண்ணங்களிலிருந்து அருந் தகையினைக் களவாடிக் கொண்டிருக்கிறது.

அதுவே உன் மேலான கற்பனையின் ஒளிவிளக்கை அணைத்துக் கொண்டிருக்கிறது.

இருத்தல் எனும் கலத்திலிருந்து சிவந்த நறுமதுவை வாரி மாந்துவாய்!

காலத்தின் பையிலிருந்து உன் பணத்தைப் பறித்துக் கொள்ளுவாய்!

உமரைப் போல் உன் ஒட்டகையிலிருந்து கீழே இறங்குவாய்!

பிறருக்குக் கடன்பட்டிருத்தலில் எச்சரிக்கையாய் இருப்பாய்,

ஆம், எச்சரிக்கை!

எத்துணை காலம் நீ பதவி தேடி அலையப்போகிறாய்

குழந்தைகள் போல் மூங்கில் மீதேறி சவாரி செய்யப் போகிறாய்?

தன் பார்வையை வான்மீது பதிக்கும் பண்பே

(பிறரின்) பலன்களைப் பெறுவதால்* மங்கிவிடுகிறது..

இரத்தலால் வறுமையானது இன்னும் அதிகமாய் இழிந்துவிடுகிறது;

இரப்பதால், இரப்பவன் முன்னினும் அதிகமாய் வறுமையுறுகிறான்,

---

* ஒருமுறை ஹலரத் (உமர் (ரலி) அவர்கள் ஒட்டகையில் அமர்ந்தபோது அவர்களது சாட்டை கீழே விழுந்துவிட்டது. அதை அவர்களே கீழிறங்கி எடுத்தார்கள். இந்தச் சிறு பணியிலும் யாருடைய உதவியையும் விரும்பவில்லை. இந்தச் சம்பவத்தையே இந்தக் கவியில் சுட்டிக்காட்டப் படுகிறது.



இரத்தல், அகமியத்தைப் பிரித்துவிடுகிறது.

அகமியமாகும் சினாய் புதரின் ஒண்மையை ஒழித்து விடுகிறது.

உன் கையளவேயுள்ள தூசியின் துகள்களை வெளியில் சிதறடித்து விட வேண்டாம்;

திங்களைப்போல் உன் பக்கமிருந்தே உணவை வருந்திப் பெறுவாய்!

வறுமை, துயரம் வாய்ப்பட்டவனாய் நீ இருந்த போதினும்,

துன்பத்தால் மூழ்கடிக்கப்பட்டவனாய் இருந்த போதினும்

உன் அன்றாட உணவைப் பிறரின் தயவில் (கொடையில்) தேடாதே;

பரிதியின் ஊற்றிலிருந்து நீரைத் தேடாதே!

இலையேல் நீ இறைவன் தூதுவர் முன்னிலையில் அவமானமுற நேரும்

ஆன்மாக்கள் அனைத்தும் அச்சத்தால் அதிர்ந்து போயிருக்கும் அன்றையத் தினத்தில்.

வான்பரிதியிடமிருந்தே தண்மதி தன் உணவைப் பெற்றுக்கொள்ளுகிறது.

அதன் கொடையின் குறியீட்டைத் தன் இதயத்தில் தாங்குகிறது.

இறைவனிடம் துணிச்சலை வேண்டு!

விதியுடன் போராடு !

தூய சமயத்தின் கண்ணியத்தைக் கறைபடுத்தி விடாதே!

கஅபாவிலிருந்துக் கல்லுருக் குப்பையை ஒதுக்கித் தள்ளிய அவர்,

தன் உணவைத் தானே தேடிக்கொள்ளம் ஒருவனை இறைவன் நேசிக்கிறான் என்று கூறினார்.

பிறரிடமிருந்துத் தன் உணவைப் பெறுபவனுக்குத் துக்கம்தான்;

(பிறரிடமிருந்து) பெறும் பலன்களைக் கொண்டுத் தன் பிடரியை வளைய விட்டவனுக்குத் (துக்கம்தான்)

அவன் தனக்கு ஈயப்பட்ட பிறரின் தயைகளின் மின்னலில் தன்னையே எரித்துக் கொள்ளுகிறான்,

அவன் ஓர் அற்பக் காசிற்காகத் தன் கௌரவத்தையே விற்றிருக்கிறான்,

வெய்யிலின் வெப்பத்தில் தாகத்தால் தவிப்பவன் களிப்புள்ளவனாவான்.

அவன் கிளரிட*மிருந்து ஒரு கோப்பை நீருக்காக இரக்காவிடில்!

அவன் புருவம் இரத்தலின் அவமானத்தால் ஈரமாக வில்லை;

★ உயிர் ஊற்று நீரை கிளர் (அலை) அருந்தினர் என்பர்.



இன்னும் அவன் ஒருமனிதன்தான், களிமண் துண்ட மல்ல.

வானத்தின் கீழ் நடைபோடும் அம்மேலான இளை ஞனோ,

தேவதாரு தருவைப்போல் தன் தலைநிமிர்ந்து (நடக்கின்றான்)

அவன் கைகள் காலியாயிருக்கின்றனவா? அவ்வள வுக்கவ்வளவு அவன் தனக்கே தான் எஜமானனாயிருக் கிறான்.

அவனுடைய அதிருஷ்டம் மெலிகிறதா? அவ்வளவுக் கவ்வளவு அவன் உற்சாகமுறுகிறான்.

விரிகடல் முழுதுமே இரத்தலில் கிடைத்தாலும் அது ஓர் எரிதழல் ஆழிதான்;

ஒருவன், தன் சொந்தக் கரங்களாலேயே சேர்த்த சிறுபனித் திவலைகூட இனிமை மிகுந்ததாகும்.

(நீ) ஒரு கௌரவ மனிதனாயிரு, நீர்க்குமிழி போல்

அலைகடலின் நடுவிலும் கூட (பிறரிடம் இரப்பதற் காக) உன் கோப்பையை நிமிர்த்திவிட வேண்டாம்!

★★

## 6

அன்பால் அகமியம் உரப்படுத்தப்படும் பொழுது ஞாலத்தின் ஆற்றல்கள் மீது ஆதிக்கம் பெற்றுவிடுகிறது என்கிறார் கவிஞர். அவ்விதம் அன்பால் அகமியத்தை வலுப்படுத்திய முனிவர் ஒருவர் தம் மாணவரை அவமதித்த அரசரை அடிபணியச் செய்த நிகழ்ச்சி ஒன்றையும் குறிப்பிடுகிறார். அத்தகைய முனிவர்களின் மனத்தைப் புண்படுத்தி எரியும் நெருப்பில் நம்மையே நாம் எறிந்து கொள்ள வேண்டாமென எச்சரிக்கிறார்.

அன்பால் அகமியம் உரமுறும்பொழுது

அதன்வலி முழு உலகையும் ஆளுகிறது.

தாரகைக் கணங்களால் வானத்தை அலங்கரித்த விண்ணக வித்தகர்.

அகமியத்தின் கிளையிலிருந்து இம்மலர் முகைகளையே பறித்தெடுத்தார்.

அவர் கரம் இறை கரமேயாம்!

அவரின் விரல்களால் தண்மதியும் விண்டது! *

★ நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சந்திரனைப் பிளக்கச் செய்தார்கள்.



அதுவே உலகின் பிணக்குகள் அனைத்திலும் நடுநிலை நின்ற நியாயம் கூறுவதாகும்.

அவர் ஆணை டரயசாலும் ஜம்ஷிதாலும் அடி பணியப்பட்டது.

நான் அபூஅலியின் கதையொன்றை உனக்குக் கூறுவேன்!*

அவர் பெயர் இந்தியாவெங்கும் பிரபலமாகியிருக்கிறது,

அவர் பழங்கால ரோஜா மலர்வனத்தைப் பற்றிப் பாடியவர்.

வனப்புறு ரோஜா மலரின் கதையை நமக்குக் கூறியவர்:

அவரின் அலையும் ஆடைத் தொங்கலின் வளியே

எரிபிறந்த இந்நாட்டை ஒரு துறக்கமாக ஆக்கியது.

ஒருநாள் அவரின் இளம் மாணவர் ஒருவர் கடைத் தெருவுக்குச் சென்றார்-

அபூ அலியின் அறிவு மது அவரின் தலையைக் கிறுகிறுக்கச் செய்திருந்தது.

(அப்பொழுது) அந்நகர் ஆளும் அதிகாரி புரவியொன்றின் முதுகின்மேல் இவர்ந்து வந்து கொண்டிருந்தான்.

அவன் பின்னே புரவியில் அவன் ஊழியனும் அதிகாரத் தண்டு சுமப்பவனும் வந்தனர்.

★ *'அபூ அலி கலந்தா' என்னும் ஞானி. இவர்களின் இயற்பெயர் ஷேய்க் ஷர்புத்தீன். பானிபட்டைச் சேர்ந்தவர்கள் இவர்கள் கி.பி. 1325-ல் காலமானார்கள்.*

முன்னே செல்பவன் முழங்கினான் :

''ஓ அறிவற்ற மூடனே,

ஆளும் அதிகாரியின் பரிவாரம் செலும் வழியில் குறுக்கிடாதே!''

ஆனால் அந்த தர்வேஷோ (இவையொன்றையும் கவனியாமல்) குனிந்த தலையுடன் நடந்து சென்றார்,

தம் சிந்தனை ஆழியில் மூழ்கியவராய்.

அதைக் கண்டுத் தண்டு சுமப்போன் கருவம் எனும் மது மாந்தி,

அந்தத் தர்வேஷின் தலையில் தன் தண்டால் அடித் தான்!

அவர் உடனே அதிகாரி செலும் வழி துறந்து அப்பால் வேதனையுடன் நகர்ந்தார்,

துயரம் உறுத்த, துக்கம் வறுத்த, கனத்துப்போன இதயம் அழுத்த.

அபூ அலியிடம் வந்தார் அவர் (நடந்தவை கூறி) முறையிட்டார்.

தம் விழிகளிலிருந்துக் கண்ணீர்த் துளிகளை விடு வித்தார்.

மலை மேல் விழும் இடியைப் போல்,

ஷேக்கானவர் அனற்பெறி பறக்கும் சொற்றாரை யொன்றைப் பொழிந்து தள்ளினர்.

தம் ஆன்மாவிலிருந்துப் புதுமையான ஓர் அனலை அவிழ்த்துவிட்டார்,



(அக்கணமே) தம் செயலருக்கோர் ஆணை விடுத்தார்,

''எடு உன் எழுதுகோலை, வரைக ஒரு மடலே

ஒரு தர்வேஷிடமிருந்து சுல்தானுக்கு!

கூறு 'உன் அதிகாரி எம் ஊழியரின் தலையை உடைத் திருக்கிறான்;

அவன் தன் வாழ்வின் மீது எரியும் கரிகளை வீசி யிருக்கிறான்,

சிறைப்படுத்துவாய் அத் தீய அதிகாரியை,

இலையேல் நான் பிறிதொருவனுக்கு உன் அரசை வழங்கி விடுவேன்!''

இறைவனை அணுகக்கூடிய அம்முனிபுங்கவரின் முடங்கல்

அரசரின் ஒவ்வோர் உறுப்பையும் நடுங்கச் செய்தது.

அவரின் உடலம் வேதனைகளால் நிரம்பியது.

மாலைக் கதிரவனைப் போல் அவர் வெளுத்துப் போனார்.

அவ்வதிகாரிக்கு இடுவதற்காக விலங்கொன்றைத் தேடிக்கண்டார்.

குறை பொறுத்துக் குற்றம் மறக்க அபூ அலியை வேண்டினார்.

குஸ்ரூ,* இன்குரல் அமை, திறனாய் பெரும்புலவர்!

---

★ *அமீர் குஸ்ரூ மிகவும் புகழ்பெற்ற பார்சி கவிஞர்.*

அவரின் இசைப் பொருத்தங்கள் வளமிக்க அவரின் மனத்திலிருந்து வழிந்தவையாம்.

அவரின் மேதையோ தண்ணிலாவின் மென்னொளி பெற்றதாம்.

அவர் அரசரின் தூதுவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அவர் அபூ அலியின் திருமுன் சென்றுத் தம் வீணையை மீட்டியபொழுது,

அவரின் கீதமானது அந்தப் பக்கீரின் ஆன்மாவைப் பளிங்குப்போல் உருக்கியது.

மலைபோல் உறுதியாய் நின்றதோர் அரசையே

கவிதையின் இசையொன்று அருளாய்ப் பெற்றது.

தர்வேஷ்களின் உள்ளங்களைப் புண்படுத்திவிட வேண்டாம்,

எரியும் அனலிலும் உனையே நீ எறிந்துகொள்ள வேண்டாம்!

* *

# 7

பிளேட்டோவின் தத்துவங்களைப் பின்பற்றி வலுவிழந்துவிட்ட முஸ்லிம்களை வீறுகொண்டு எழச் செய்ய வேண்டுமென விழைகிறார். கவிஞர். அதற்காக அழகான கதை ஒன்றைக் கூறி முஸ்லிம்களைத் தட்டி எழுப்பு கிறார். பழைய முஸ்லிம்களைத் தட்டி எழுப்பு கிறார். பழைய முஸ்லிம்களை வீறுமிக்க புலி களுக்கும், வீண்தத்துவம் பேசும் கிரேக்க அறிஞர்களை தந்திர மிக்கக் கிழட்டு ஆட்டுக் கும் ஒப்பிடுகிறார். தன் இனத்தைக் காத்துக் கொள்ள கிழட்டு ஆடு செய்த போதனையை நம்பி வலுவிழந்துவிட்ட புலிகளுக்கு முஸ்லிம் களை ஒப்பிடுகிறார்.

நீ கேள்விப்பட்டிருக்கிறாயா, பழங்காலத்தில்

ஒரு புல்வெளியில் வாழ்ந்த செம்மறிகள்

அவை பல்கிப் பெருகிவிட்டன,

எப்பகைவர்க்கும் அஞ்சா அளவில்?

இறுதியில் விதியின் கெடுமதியால்,

அவற்றின் மார்புகள் துன்பமெனும் தண்டால் பிளக்கப்பட்டன.

வயப்புலிகள் வனத்திலிருந்து பாய்ந்து வந்து

செம்மறித் திறள்மீது விழுந்தன.

வெல்வதும் (வென்றவற்றை) ஆள்வதும் வலிமையின் குறிகளாகும்;

வெற்றி, வலிமையின் விளக்கமாகும்,

அவ்வயப்புலிகள் ஆதிபத்தியப் பறை அறைந்தன,

செம்மறிகளின் சுதந்திரத்தைப் பறித்தன.

புலிகளின் இரை பெருகப் பெருக,

அப்புல்வெளி, செம்மறிகளின் குருதிக் குழம்பால் குங்குமக் குளமாகியது.

செம்மறிகளில் ஒன்று, நுண்ணறிவும் கூர்மதியும் கொண்டது,

வயதில் முதிர்ந்தது, காற்றில் அடிபட்ட ஓநாயைப் போல் தந்திரம் மிகுந்தது,

தம் இனத்தவரின் விதியை நினைந்து வருந்தி

புலிகளின் கொடுமை கண்டு துயரம் மிகவே கொண்டு,

விதியின் போக்கைக் கூறி முறையிட்டது.

தன் இனத்தவரின் நல்வாழ்வைத் திரும்பக் கொணர உபாயம் ஒன்று தேடியது.

பலவீனமானவை தம்மைக் காத்துக்கொள்ளுவதற்கு,

திறனார் அறிவால் உபாயம் தேடுகின்றன.

அடிமைத்தனத்திலும் கூட,

வரும் இடரை மோதித் தள்ளுவதற்கு

சூழ்ச்சி செய்யும் வலிமை துரிதமாகிறது,



பழிவாங்கும் பைத்தியம் உறுதிகொளும்பொழுது,

அடிமையின் மனம் கூடக் கலகச் சிந்தனையில் நிலைக்கிறது.

''நம்முடைய பிரச்சினை மிகக் கடினமானதாகும்'' என்று அம்முதுமறி தனக்கே தான் கூறிக்கொண்டது.

நம் துயர ஆழிக்கோ கரையேயிலை.

மறிகளாகிய நாம் புலிகளிடமிருந்து வலிமையால் தப்பி விடுவதென்பது முடியாத செயலாகும்;

நம் கால்களோ வெள்ளி, அதன் உள்பாதங்களோ உருக்காகும்.

எவ்வளவுதான் ஓர் உணர்வூட்டி அறிவுரை தந்தாலும் இயலாது,

ஆனால் சினமிகு புலியை ஒரு செம்மறியாக்குவது- அது இயலும் தான்;

அது தன் இயல்பை மறக்கச் செய்வது- அதுவும் சாலுந்தான்.''

முதுமறி அருள்புலமை வாய்ந்ததொரு தூதரைப் போலாகியது,

குருதித் தாகமிகுந்தப் புலிகளுக்குப் போதனை புரியத் துவங்கியது,

''ஓ கர்வம் நிறைந்த பொய்யர்களே,

துரதிருஷ்ட நாளொன்று எப்பொழுதும் உண்டு என்பதை அறியாதோரே!*

---

★ குர் ஆன் வசனம் இது.

நான் தெய்வீக ஆற்றல் பெற்றிருக்கிறேன்,

நான் புலிகளுக்காக இறைவனால் அனுப்பப்பட்ட தூதுவனாவேன்.

இருள் நிறைந்த வழிகளுக்கோர் விளக்கம் போல் நான் வந்திருக்கிறேன்.

சட்டங்கள் அமைக்கவும் கட்டளைகள் வழங்கவும் நான் வந்திருக்கிறேன்.

குறை மலிந்த நும் செயல் நினைந்து வருந்துங்கள்!

ஓ தீங்கு புரியச் சூழ்ச்சி செய்வோரே, நன்மையை நுங்கட்கு நினைவுபடுத்துங்கள்!

கொடுமையும் வலிமையுமுடையவன் எவனோ அவன் வருந்த நேரும்.

வாழ்வின் உறுதியானது அகமியத்தை இல்லாதொழிப் பதையே பொருத்திருக்கிறது.

நேரியரின் ஆன்மாவோ குலை, தழையையே (விலங்குகளின் உணவு) உண்ணுகிறது.

புலால் மறுத்தோன் இறையிடம் அங்கீகாரம் பெற்றவ னாகிறான்.

உங்கள் பல்லின் கூர்மை உங்களுக்கு அவமானமே கொணர்கிறது.

நோக்குவதை விளக்கும் உங்களின் விழியை இரு ளாக்குகிறது.

எளியவர்க்குரியது தான் துறக்கமாகும்,

வலிமை அழிவுக்கொரு மார்க்கம் தானே.



பெருமையும் புகழும் தேடுவது கேடாகும்.

வறுமையானது அரசினும் மிக இனியதாம்.

மின்னல் (இடி) பயிரின் வித்தைப் பயமுறுத்துவ தில்லை;

வித்து ஒரு போராய்த் திரண்டால் அறிவுடைமை யன்று.

நீங்கள் உணர்வுள்ளவராயிருப்பின் நீங்கள் மணலின் ஓர் அணுவாகுங்கள். ஒரு சஹாராவாகாதீர்கள்.

ஏனெனில் நீங்கள் பரிதியின் ஒளிப்பிழம்பை நுகரலா மல்லவா.

ஓ செம்மறிகளைக் கொல்லுவதில் இன்பமுறுவோரே,

உங்களின் அகமியத்தைக் கொல்லுங்கள், நீங்கள் கௌரவம் பெறுவீர்கள்!

வாழ்க்கை உறுதியற்றதாய் ஆக்கப்பட்டிருக்கிறது.

பலாத்காரத்தால், அடக்குமுறையால், பழிவாங்கு தலால், ஆற்றலைப் பயன்படுத்துதலால்.

பாதத்தின் அடியில் கிடந்து நைந்து சிதைந்தாலும் காலத்திற்குக் காலம் புல் வளர்ந்து கொண்டுதானிருக்கிறது.

மீண்டும் மீண்டும் அதன் வழியிலிருந்து துயிலைக் கழுவிக்கொண்டுதானிருக்கிறது.

நீங்கள் அறிவுள்ளவர்களாயிருந்தால் உங்களின் அகமியத்தை மறந்துவிடுங்கள்!

உங்களின் அகமியத்தை மறக்காவிடிலோ நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள்!

உங்களின் கண்களை மூடிவிடுங்கள், காதுகளை மூடுங்கள், அதரங்களை மூடுங்கள்!*

உங்களின் எண்ணங்கள் உயர்வான் முகட்டையும் எட்டலாம்.

உலகில் இப்புல்வெளி ஒன்றுமன்று, ஒன்றுமன்று;

ஓ முட்டாளே, ஒரு மாயத் தோற்றத்திற்காக உன்னையே வருத்திக் கொள்ள வேண்டாம்!''

புலியினம் கடினப் போராட்டங்களால் தீர்ந்துபோய் விட்டது,

நுண்சுவை நுகர்ச்சியை அவை தம் இதயம் பதித்தன.

தம் மூடத்தனத்தால் அவை செம்மறிகளின் அழகை அள்ளி விழுங்கின.

மறிகளைத் தம் இரையாகக் கொளும் வழக்கமுடைய புலியானது.

இப்பொழுது செம்மறிகளின் சமயமொன்றைத் தழுவியது.

புல்லுணவைப் புலிகள் பிரியமுடன் ஏற்றுக்கொண் டன;

நாளடைவில் அவற்றின் புலி இயல்புகள் தகர்க்கப் பட்டன.

புல்லுணவு அவற்றின் பற்களை மழுக்கின.

அவற்றின் விழிகளின் பயங்கர மின்னல் ஒளிகளை அவித்தன.

★ மஸ்னவியின் வரி இது.



படிப்படியாகத் துணிச்சல் அவற்றின் நெஞ்சங்களி லிருந்து வடிந்தது,

கண்ணாடியிலிருந்து ஒளிச்சுடர் விடைபெற்றுக் கொண்டது.

இறுதிவரை முயலும் இயல்பு நழுவியது,

செயல்புரிய வேண்டுமெனும் ஏக்கம் அவற்றின் நெஞ்சங்களில் நிலைக்கவில்லை.

ஆளும் வலிமையையும் சுயேச்சையாய் இருக்க வேண்டுமெனும் தீர்மானத்தையும் அவை இழந்தன,

புகழ், மதிப்பு, அதிருஷ்டம் இவற்றை அவை இழந் தன;

உருக்கைப் போலிருந்த அவற்றின் உட்பாதங்கள் உறுதி இழந்தன.

அவற்றின் ஆன்மா மரிக்க, உடலம் கல்லறையாகியது.

உடல்வலி மறைய இறையச்சம் பெருகியது;

இறையச்சம் அவற்றின் துணிச்சலைக் களவாடியது.

துணிவின்மை ஒரு நூறு பிணிதமை உண்டு பண்ணியது-

வறுமை, திடமின்மை, இழிமனம்.

விழிப்புடனிருந்த வயப்புலி மறியின் வனப்பில் மயங்கி உறங்கிவிட்டது;

அது தன் சீரழிவை ஒழுக்கம் என்று அழைத்தது.

★★

## 8

கிழட்டு ஆட்டின் போதனையை நம்பி வலுவிலுந்து போன புலிகளாகிய முஸ்லிம்கள் விழித்தெழ வேண்டும். 'மெழுகுவர்த்தி அணைவதால் தான் பெருமையுறுகிறது'' போன்ற பிளேட்டோவின் கருத்துக்களைத் தூக்கி எறிய வேண்டும். மனிதன் வாழப்பிறந்தான் எனக் கொள்ள வேண்டும். பிளேட்டோ நம்மை உறங்க வைத்து விட்டான். அவன் கருத்துக்களை ஏற்கவேண்டாம். குர்ஆன் நமக்கு இருக்கிறது. பின் பற்றுவோம். அது நமக்கு உன்னத வழி காட்டக் கூடியதாகும்' என்று அழைக்கிறார் அல்லாமா.

பழம்பெரும் துறவியும் ஞானியுமான பிளேட்டோ, (அப்லாதூன்)

பழைய செம்மறிக் கூட்டத்தில் ஒருவனாவான்.

அவன் சூனிய விவாதமெனும் இருளில் வழி தெரியாது அலைந்தான்.

அதன் மிதியடியை யதார்த்த வாதமெனும் பாறை களின் மத்தியில் நழுவவிட்டான்.

புலப்படாதவற்றால் அவன் அவ்வளவு தூரம் கவரப் பட்டான்.

அவன் கை, கண், காதுகள் பற்றிய நம்பிக்கை இழக் கும் அளவு.



''இறப்பதே வாழ்வின் இரகசியம்'' என்றான் அவன்;

அணைக்கப்படுதலாலேயே மெழுகுவர்த்தி பெருமை யுறுகிறது'.

அவன் நம் சிந்தனை மீது ஆதிக்கம் செலுத்துகிறான்.

அவன் கிண்ணம் நம்மைத் துயிலச் செய்கிறது. நம்மிடமிருந்து உணர்வுள்ள உலகைப் பறித்துக் கொள்ளு கிறது.

அவன் மனித உடையிலுள்ள ஒரு மறியாவான்,

அவன் அதிகாரத்திற்கு சூபியின் ஆன்மா வளை கிறது.

அவன் தன் அறிவுகொண்டு (எல்லாவற்றிற்கும்) உயரமான விண்ணகத்திற்கு உயர்ந்தேகினான்

அவன் அற்புதம் நிறை உலகை ஒரு கற்பிதக் கதை யென்று அழைத்தான்.

வாழ்வின் அமைப்பைத் தகர்ப்பதே அவன் வேலையா யிருந்தது.

வாழ்வின் கவினுறு தருவின் கிளைதனை நேராய்ப் பிளப்பதே (அவன் வேலையாயிருந்தது)

(உலகம்) பிளோட்டோவின் சிந்தனை இழப்பை இலாபமாய்க் கருதியது.

அவன் தத்துவார்த்தமோ இருத்தலை இருப்பதில்லை என்றது.

அவன் இயல்புகள் உறங்கி ஒரு கனவை உண்டு பண்ணின,

அவனுடைய மனக்கண் ஒரு பேய்த்தேரைத் தோற்று வித்தது.

ஏனெனில் அவனுக்குச் செயல்புரிவதில் யாதொரு சுவையும் இல்லாதிருந்ததால்.

அவன் ஆன்மா இலாதவற்றால் பரவசமடைந்தது.

அவன் இச் சட பிரபஞ்சத்தில் நம்பிக்கை கொள்ள வில்லை,

கண்ணுக்குப் புலப்படாக் கருத்துக்களை ஆக்கு பவனாய் ஆனான் அவன்.

வாழும் உயிர்க்கு இனிமை பயப்பதாம் அற்புதம் நிறை இவ்வையம்,

மரித்த உயிர்க்குப் பிரியமானதோ எண்ணத்தளவே உள்ள கருத்துக்களின் உலகம்தான்.

அதன் மான்கள் ஊரும் பேறைப் பெறவில்லை,

அதன் கௌதாரிப் பறவைகளுக்கு உசிதமாய் நடந்து பெறும் இன்பம் மறுக்கப்படுகிறது.

அதன் பனித்துளிகள் அசைய இயலாதிருக்கின்றன,

அதன் பறவைகளுக்கு நெஞ்சில் மூச்சைக் காணோம்,

அதன் வித்துக்கள் வளர விரும்பவில்லை,



அதன் விட்டில்கள் எவ்வாறு சிறகடிப்பது என்பதைக் கூட அறியவில்லை.

நம் துறவிக்கு ஓடுவதைத் தவிர்த்து வேறு வழி யில்லை;

அவரால் இவ்வுலகின் கூச்சலைப் பொறுக்க இயலாது

அவிந்துபோன அழலின் ஒளி மீது அவர் தம் இதயத் தைப் பதித்தார்.

அபினில் மூழ்கிய உலகொன்றை வருணித்தார்.

அவர் தம் சிறகுகளை வான்பக்கம் விரித்தார்.

திரும்ப அவர்தம் இல்லம் வரவில்லை.

அவரின் உருவம் விண்ணகக் கலத்தில் மூழ்கியிருக் கிறது;

அது மதுக் கலத்தின் வண்டலோ, செங்கலோ என்பது எனக்குத் தெரியாது!*

அவரின் மது மயக்கத்தால் மக்கள் நஞ்சூட்டப்பட்டனர்;

அவர் உறங்கினார், செயல் புரிவதில் இன்பம் கொளாமல்.

* *

★ கிழக்கு நாடுகளில் மதுக்கலத்தின் அடியிலோ அல்லது மேலேயோ ஒரு செங்கல்லை வைப்பதுண்டு.

## 9

கவிஞனின் கையிலிருப்பது ஆற்றல் மிக்க ஆயுதம். அதனைக் கொண்டு அளவற்ற நன்மையும் செய்யலாம், அளவற்ற தீமையும் செய்து விடலாம். கவிஞன் எப்படி இருக்க வேண்டும், எப்படி இருக்கக்கூடாது என்பதனை அழகாக விளக்குகிறார் அல்லாமா இந்த அத்தியாயத்தில் கவிதை பற்றிய அவர் கருத்துக்கள் என்ன இஸ்லாமிய இலக்கியத்தில் அவர் விரும்பும் மாறுதல்கள் யாவை என்பதை இதில் காணலாம்.

விருப்பமெனும் எரி கொம்பே மனிதனின் உதிரத்தைச் சூடாய் ஓடச் செய்கிறது,

விருப்பின் விளக்காலேயே இப்புழுதியின் துகள் சிறைப்பட்டிருக்கிறது.

விருப்பினாலேயே வாழ்வுக் கோப்பையின் விளிம்பைத் தழுவ மது நிறைந்துயர்கிறது.

எனவேதான் வாழ்வு துள்ளி எழுந்து துரிதமுடன் நடைபோடுகிறது.

வெல்வது ஒன்றினால்தான் வாழ்வு கைக்கொளப்பட்டிருக்கிறது.



வெல்வதற்கு வேண்டிய ஒரே கவர்ச்சி விருப்பம் தான்.

வாழ்க்கையை வேட்டைக்காரன் என்றால் விருப்பைப் பொறி எனலாம்,

விருப்பம் அழகிற்கு அன்பு விடும் செய்தியாகும்.

எங்கு இடையறாது விருப்பம் உறைகிறது?

வாழ்க்கைக் கீதத்தின் கீழ்மேல் ஸ்தாயிகளிலா?

நல்லது, நேரியது, அழகியது எதுவும்

தேடுதலின் வனமதில் நமக்கு வழிகாட்டியாகும்.

அதன் பிம்பம் உன் நெஞ்சத்தில் அழுந்த விழுந்திருக்கிறது,

அது உன் இதயத்தில் விருப்பை விளைக்கிறது.

விருப்பின் வசந்தத்தை உண்டு பண்ணுவது அழகு,

அழகின் விளக்கத்தால் ஊட்டி வளர்க்கப்படுவது விருப்பு.

கவிஞனின் நெஞ்சத்திலே தான் அழகு திரை விலக்கி வெளிப்படுகிறது.

அவன் சினாயிலிருந்துதான் அழகின் பிழம்புகள் எழுகின்றன.

அவன் விழிபட அழகு பேரெழிலாகிறது,

அவன் மயக்கத்தின் மூலம் தான் இயற்கை கொள்ளை அன்புக்குரியதாகிறது.

குயில் இசை பயின்றது அவன் இதழ்களிலிருந்துதான்.

ரோஜாவின் கன்னத்தைப் பளபளப்பாக்குவது அவனிடமிருக்கும் மெருகுத் துகளே.

விட்டிலின் நெஞ்சினில் எரிவது அவனுடைய வெறியே,

காதற் கதைகட்கு ஒளிரும் வண்ணங்கள் வழங்குபவன் அவன்தான்.

ஆழியும் நிலமும் அவன் நீரிலும் களிமண்ணிலும்* ஒளிந்திருக்கின்றன,

ஒரு நூறு புத்துலகங்கள் அவன் நெஞ்சில் மறைந்திருக்கின்றன.

அவனுடைய மூளையில் பூவரசு மலர்கள் முகிழ்த்து மலரு முன்னர்

அங்கு மகிழ்விசையே, துன்ப கீதமோ கேட்கவில்லை.

அவன் இசை நம்மீது வியத்தகு மாயமயக்கத்தை வீசுகிறது,

அவன் எழுதுகோல் தனிமயிர் ஒன்றைக் கொண்டே ஒரு மலையை வளைந்து விடுகிறது.

அவன் சிந்தனைகள் வான் மதியுடனும் விண்மீன்களுடனும் வதிகின்றன.

---

★ களிமண் - அவன் உடல்



அவன் அழகை ஆக்குகின்றான், அவலட்சணத்தை அவன் அறியான்.

அவன் ஒரு கிளிர் ஆவான், அவனுடைய இருளின் இடையே தான் வாழ்வின் ஊற்று உறைகிறது : 2

இருக்கும் பொருள் அனைத்தும் அவன் விழி நீரால் அதிகம் வாழ ஆக்கப்படுகிறது.

செம்மையுறா புதுமாணவர்போல் நாம் கணத்துடன் செல்லுகிறோம்,

குறிக்கோளின் நெறியில் தடுமாறிக் கொண்டு.

அவன் குயில் ஒரு பண்ணிசைத்திருக்கிறது.

நம்மை வஞ்சிக்க ஒரு சூழ்ச்சி செய்திருக்கிறது,

அவன் நமை வாழ்வின் துறக்கத்துள் வழிகாட்டி அழைத்துச் செலாம் என்று,

வாழ்வின் வளைவு முழுவளையமாய் ஆகலாம் என்று.

அவன் மணியோசையில் ஒட்டகைக் கூட்டங்கள் நடைபோடுகின்றன.

அவன் குழலின குரலைத் தொடர்கின்றன;

அவனுடைய மென்காற்று நம்முடைய மலர்க்காவில் வீசும்பொழுது,

அது மெல்ல மலர்களினுள் கள்ளத்தனமாய் நுழைந்து விடுகிறது.

அவனுடைய மாயவித்தை வாழ்வுதானே வளர வகை செய்கிறது.

சுயவினா விடுக்கிறது, பொறுமை துறக்கிறது.

அவன் தன்னுடன் விருந்தருந்த முழு உலகையுமே அழைக்கின்றான்;

அவன் தன் தீயை வளியைப் போல் அது மலிவா யிருப்பதாய்க் கருதிக் கொண்டு பாழுக்கிறைக்கின்றான்.

இறப்பிற்குத் தமை ஒப்புவிக்கும் மக்களுக்குத் துக்கம் தான்,

வாழ்வதின் களிப்பிலிருந்துத் திரும்பி விட்ட அவனுடைய கவிஞனுக்கும் துக்கம்தான்!

அவனுடைய ஆடியோ அழகை அவலட்சணமாய்க் காண்பிக்கிறது,

அவனுடைய தேனோ உள்ளத்தில் ஒரு முள்ளை விட்டுச் செல்கிறது

அவனுடைய முத்தம் ரோஜா மலரின் புதுமையைக் களவாடி விடுகிறது,

அவன் குயிலின் நெஞ்சத்திலிருந்து பறப்பதில் பிறக்கும் களிப்பையே பறித்துவிடுகிறான்.

அவன் அபினால் உன் பனித்துளிகள் நெகிழ்விக்கப் படுகின்றன.

அவன்கீதத்திற்கு நீயோ உன் உயிரையே அளித்து விடுகிறாயே,



அவன், சைப்ரஸ் மரம் தன் அழகால் பெறும் இன்பத்தைப் பறித்து விடுகிறான்.

அவனுடைய குளிர்ந்த மூச்சுக்காற்று சண்டைப் பறவையை வேட்டைக்குப் பழக்கிய ஆண் வல்லூறாக மாற்றுகிறது.

அவன் ஒரு மீன், மார்புக்கு மேலிருந்து ஒரு மனிதன்.

ஆழியில் அலையும் ஜலமோகினியைப் போல்

அவன் தன் கீதத்தால் கப்பலோட்டிகளையே மயக்கி விடுகிறான்.

கப்பலை கடலின் அடிக்கு அனுப்புகிறான்,

அவனுடைய இசைகள் உன் உள்ளத்திலிருந்து உறுதியைக் களவாடி விடுகின்றன.

அவனுடைய மாயாஜாலம் உன்னை இறப்பே வாழ்க்கை என்பதை ஏற்கும்படிச் செய்கிறது.

அவன் உன் ஆன்மாவிலிருந்து வாழ்தலின் விருப்பத்தையே எடுத்துவிடுகிறான்,

அவன் உன் சுரங்கத்திலிருந்து நாண் சிவப்பு மாணிக்கத்தை எடுத்துவிடுகிறான்.

அவன் இலாபத்திற்கு இழப்பின் உடைதனை அணிவிக்கின்றான்.

போற்றற்குரியவை அனைத்தையும் அவன் பொல்லாங்குள்ளவையாய்ச் செய்கிறான்,

அவன், சிந்தனை ஆழியில் உன்னையே மூழ்கடிக் கிறான்.

செயலுக்கு உன்னைப் புதியவனாய் ஆக்குகிறான்.

அவன் பிணிவாய்ப்பட்டிருக்கிறான், அவன் சொற் களால் நம் பிணி வளர்கிறது.

அவன் கிண்ணம் சுற்றிச் சுற்றிவர, வர அதிலிருந்து மது மாந்துவோர் அதிகம் பிணியுறுகின்றனர்.

அவனுடைய இளவேனிலில் (ஏப்ரலில்) மின்ன லுடன் கூடிய மழையிருப்பதில்லை,

அவனுடைய மலர்க்காவோ நிறமும் நறுமணமும் அற்ற ஒரு கானல் நீராகும்.

அவனுடைய அழகுக்கும் உண்மைக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது,

அவனுடைய கடலில் உடைந்த முத்துக்களைத் தவிர்த்து வேறு ஒன்றுமில்லை.

துயில் புரிவது விழித்திருப்பதினும் இனிமை மிகுந்தது என்று நினைத்தான் அவன்.

அவன் மூச்சுக்காற்றால் நம் தீ அவிந்தது.

அவன் குயிலின் கீதத்தால் நம் நெஞ்சத்தில் நஞ்சு ஏறியது;

அவனுடைய ரோஜா மலர்க் குவியலின் அடியில் அரவம் ஒன்று மறைந்திருந்தது.



அவனுடைய கிண்ணத்தையும் கோப்பையையும் பற்றி எச்சரிக்கையாயிருப்பாயாக!

அவனுடைய ஒளிரும் நற (மது) வைப்பற்றி எச்சரிக்கை யாயிருப்பாயாக!

ஒ அவனுடைய மதுமாந்தித் தாழ்ந்தவனே,

உன் உதயத்திற்காக அவனுடைய கிண்ணத்தை நோக்குபவனே

அவன் இன்னிசை கேட்டு இதயம் குளிர்ந்தவனே,

நீ இறப்பைத் தரும் ஆலமதை உன் செவி வழியே அருந்தியிருக்கிறாய்!

உன் வாழ்வு நெறியே உன் க்ஷீணிப்பிற்கு ஒரு சான்றாகும்,

உன் இசைக்கருவியின் நரம்பதனில் ஒலியிலையே.

அவன் உனக்குத் தெவிட்ட ஊட்டிய சுகம்தான் உன்னை இத்துணை மோசமாக்கியிருக்கிறது,

அவனி முழுதுமே இஸ்லாத்திற்கோர் அவமானமாகும்,

ஒரு ரோஜா மலரின் நரம்பினைக் கொண்டே உன்னைப் பிணைத்துவிட முடியும்.

ஒரு மென்காற்றைக் கொண்டே ஒருவன் உன்னைப் புண்படுத்திவிட முடியும்.

உன் அழுகுரலால் அன்பானது அவமானப்படுத்தப் பட்டிருக்கிறது,

உன் தூரிகையால் அவனுடைய எழில் ஓவியம் பாழாக்கப்பட்டிருக்கறிது.

உன் பிணி அவன் கன்னத்தை வெளுப்பாக்கியிருக் கிறது,

உன் தண்மை அவன் எரியிலிருந்து ஒண்மையைப் பறித்திருக்கிறது.

உன் உளப் பிணிகளால் அவனும் உளப் பிணியுற் றிருக்கிறான்.

உன் பலவீனங்களால் அவனும் பலவீனப்படுத்தப் பட்டிருக்கிறான்.

அவன் கிண்ணம் முழுவதும் குழந்தைக் கண்ணீர் நிரம்பியிருக்கிறது,

துயரப் பெருமூச்சுகளால் அவன் இல்லம் அலங் கரிக்கப்பட்டுள்ளது.

மதுக்கடையின் வாயில்களில் இரந்து நிற்கும் குடிகார னாவான் அவன்.

பலகணியின் பிளவு வழியே அழகின் தோற்றங் களைக் களவாடிக் கொண்டு,

மகிழ்வற்று, துயறுற்று, புண்ணேற்று,

காவலாளியால் இறப்பை அருகு நெருங்க உதைத் தெறியப்பட்டு

கவலைகளால் வேணுபோல் வீணாக்கப்பட்டு



அவன் அதரங்களில் இறைவனுக்கெதிரான குற்றச் சாட்டுக்களின் திரட்டு.

இச்சகப் பேச்சும் வன்மக குணமும் அவன் கண்ணாடி யின் தன்மையாகும்,

ஆதரவின்மை அவன் பழைய தோழன்;

ஒரு துர்ப்பாக்கிய இழிபிறப்பின் கீழ்மகன்

மதிப்பு, நம்பிக்கை, கொள்கையற்று,

அவனுடைய பிரலாபம் உன் ஆன்மாவிலிருந்து சாரத்தையே உறிஞ்சிவிட்டிருக்கிறது,

உன் அயலாரின் விழிகளிலிருந்து அமைதியான உறக்கத்தையே விரட்டி விட்டிருக்கிறது.

அந்தோ அவிந்துபோன எரியுடையோரின் அன்பிற் காக,

புண்ணிய தளத்தில் பிறந்து, கல்லுருக்களின் இல்லத் தில் மடிந்துபோன ஓர் அன்பு!

ஓ, நீ உன் பணப்பையில் கவிதை நாணயம் வைத்திருந்தாயானால்,

அதனை வாழ்வின் உரைகல்லில் தேய்த்துத் தேர்வாய்!

தெளிவாய்க் காணும் சிந்தனை, செயல் புரிவதற்குரிய நெறியைக் காண்பிக்கிறது.

ஒளிரும் மின்னல் வரும் இடியை முன்னறிவிப்பது போல்

அது உனக்குச் சீரிய இலக்கியங்களில் மூழ்கும் தகுதி அளிக்கிறது,

அது உனக்கு அரேபியாவுக்கு ஏகும் தகுதி தருகிறது.

நீ உன் இதயத்தை சல்மா அரபிக்கு வழங்க வேண்டும்,*

ஹிஜாசின் காலை குர்திஸ்தானின் இரவிலிருந்து மலர வேண்டும்.**

நீ, பாரசீகத்தின் மலர் வனத்திலிருந்து ரோஜா மலர்களைச் சேர்த்திருக்கிறாய்

இந்தியாவினுடையவும் இரானுடையவும் வெள்ளத் தைக் கண்டிருக்கிறாய்;

இப்பொழுது சற்றுப் பாலையின் வெப்பத்தைச் சுவைத்துப் பாரேன்,

---

★ தூய முஸ்லீம் இலக்கியங்கள் சமயம் இவற்றைக் குறிப் பிடுகிறது.

★★ ஓர் அப்பாவி குர்த் சில மாணவர்களிடம் வந்து தமக்கு சூபி தத்துவங்களைப் போதிக்கும்படிக் கேட்டான். அவர்கள் உன் காலை கயிற்றால் கட்டிக் கொண்டு வீட்டுக் கூரையிலிருந்து தலைகீழாய்த் தொங்கு என்றார்கள். அவ்விதம் தொங்கும்போது உச்சரிப்பதற்கு ஏதோ ஒன்றை யும் சொல்லிக் கொடுத்தார்கள். அந்தக் குர்த் அதனை அப்படியே நம்பிக்கொண்டு அவ்விதமே செய்தான். இறைவன் அவன் பக்தியைக் கண்டு அவனுக்கு அறிவு ஒளி அளித்தான். அந்தக் குர்த் இதன் பிறகு 'மாலையில் நான் குர்தாகவும் காலையில் அரபியாகவும் இருந்தேன்' என்று கூறுவதுண்டு.



பேரீச்சம்பழத்தின் பழமையான மதுவை அருந்திப் பாரேன்!

உன் சிரத்தை அதன் வெப்பமிக்க நெஞ்சத்தில் சாய்த்துப்பார்,

உன்னுடலை அதனுடைய எரிக்கும் ஒளிக்குச் சற்று நேரம் அளிப்பாயாக!

நெடுங்காலம் நீ பட்டுப் படுக்கையில் புரண்டிருக் கிறாய்

இப்பொழுது முரட்டுப் பருத்திக்கு உன்னைப் பழக்கப் படுத்திக் கொள்ளுவாய்!

தலைமுறைகளாய் நீ பூவரசு மலர்கள் மீது கூத்தாடி யிருக்கிறாய்

உன் கன்னத்தை ரோஜா மலரைப்போல் பனிநீரில் குளிப்பாட்டியிருக்கிறாய்.

இப்பொழுது எரியும் மணல்மீது உனையே எறிந்து கொள்ளுவாய்

ஜம்ஜம்மின் ஊற்றிலே மூழ்குவாய்!

எத்துணை காலம் நீ குயிலைப் போல் கூவப் (புலம்பப்) போகிறாய்?

எத்துணை காலம் நீ உன் இல்லத்தை மலர் வனத்தின் நடுவிலே வைத்துக் கொளப் போகிறாய்?

ஓ போனிக்ஸுக்குக் கௌரவம் தரும் புனிதப் பொறியுடைய நீ,

உயர்ந்த மலைகளின் மீது உன் கூட்டைக் கட்டுவாய்,

இடியும் மின்னலும் கொண்ட ஒரு கூட்டைக் கட்டிக் கொள்ளுவாய்.

(அது) கழுகின் கூட்டினும் சிறப்பானதாயிருக்கட்டும்

நீ வாழ்வு போருக்குத் தகுந்தவனாய் இருக்கலாம் என்றால்,

உன் உடலமும் ஆன்மாவும் வாழ்வின் அழலில் எரியலாம் என்றால் !

**

# 10

அகமியத்தின் கல்விக்கு மூன்று கட்டங்கள் உண்டு. முதலாவது பணிதல், இரண்டாவது தன்னை ஆளுதல், மூன்றாவது தெய்வீகப் பிரதிநிதித்துவம் இம்மூன்றையும் அல்லாமா மிகவும் தெளிவாக விளக்குகிறார் இந்த அத்தியாயத்தில்.

## 1. பணிதல்

ஊழியமும் உழைப்பும் ஒட்டகையின் சிறப்பியல்புகளாம்,

பொறுமையும் தாளாண்மையும் அதன் நெறிகளாம்.

அரவமின்றி அது மணற்பாதையில் அடி பதித்துச் செல்கிறது,

அது பாலையில் பயணம் செய்வோர்க்கு நாவாய் ஆகும்.

எந்த வனமும் அதன் பாதச் சுவட்டை அறியும்.

அரிதாய் அருந்தி, குறைவாய் உறங்கி, அது உழைப்பிற்கு நன்கு பழக்கமாகிவிட்டது.

அது சவாரி செய்வோனையும், பொதிகளையும், புல்லையும் சுமந்து செல்லுகிறது;

அது, பயண இறுதிவரை அயராது, துரிதமாய் நடை போட்டுச் செல்லுகிறது,

தன் வேகத்தை நினைத்துக் களித்தவாறு,

பயணத்தில் தன்மீது இவர்ந்து செல்பவனினும் அதிகப் பொறுமையுடன்.

நீ கூடக் கடமையின் சுமையை மறுத்துவிடாதே.

ஏனெனில் நீ, "இறைவனுடனிருக்கும் இனிய இல் லத்தை நுகரலாம்.

பணிய முயல்வாயாக, ஓ, கவனமற்றவனே!

கண்டிப்பின் (வற்புறுத்தலின்) கனியே விடுதலை யாம்.

பணிதல் மூலமே மதிப்பற்றவனும்கூட மிகு மதிப் புறுகிறான்;

பணிவின்மையே அவன் நெருப்பைச் சாம்பராக மாற்றுகிறது.

எவன் பரிதியையும் தாரகைகளையும் வல்லமை கொள்ளுவானோ

அவன் தன்னை ஒரு சட்டத்தின் கைதியாய் ஆக்கிக் கொள்ளட்டும்!

வெறும் காற்றானது மலர் முகையுள் சிறைப்படும் பொழுதுதான் நறுமணமாகிறது;



கஸ்தூரி மானின் கொப்பூழ் கட்டுறும்போதுதான் மணமிகுக் கஸ்தூரியாகிறது

தாரகைகள் அதன் குறியை நோக்கி நகர்கின்றன.

ஒரு சட்டத்திற்குப் பணிந்து, தலைகுனிந்து.

வளர்ச்சியின் விதிக்கு அடிபணிந்தே புள் துள்ளி எழுகிறது;

அவ்விதியை விடும்போழ்து அது அடியின்கீழ் கிடந்து நைந்தழிகிறது.

விடாது ஒளிர்வதே பூவரசின் விதியாகும்.

அவ்வாறே உதிரம் அதன் நரம்புக் குழாய்களில் குதித்துக் கொண்டு ஓடுகிறது.

இணைப்பின் விதிக்கு இணங்கியே பிரிந்திருக்கும் நீர்த்துளிகள் விரிகடலாகின்றன.

மணல் துகள்கள் தாம் பரந்த சஹாராப் பாலையாய் மாறுகின்றன.

சட்டம் ஒவ்வொன்றையும் தன்னிலேயே வலிமை யுள்ளதாய் ஆக்கவதனால்,

ஏன் நீ இந்த வலிமையின் ஊற்றை அலட்சியப் படுத்துகிறாய்?

ஓ, நீ பழைய வழக்கத்திலிருந்து விடுபட்டிருக் கிறாய்!*

---

* இஸ்லாமியச் சமயச் சட்டம்

மீண்டும் ஒருமுறை உன் பாதங்களை அதே அழகிய வெள்ளிச் சங்கிலியால் அலங்கரிப்பாயாக!

விதியின் கடுமை பற்றிக் குறை கூறாதே,

முகம்மது நபியின் விதிகளை மீறி நடவாதே!

## 2. தன்னை ஆளுதல்

உன் ஆன்மா ஒட்டகையைப் போல் தனக்காக மட்டுமே கவனித்துக் கொள்ளுகிறது.

அது தன்னபிமானமும், தன்னாளுகையும் தன் விருப்பமும் உளதாயிருக்கிறது.

மனதனாயிரு, அதன் கயிற்றை உன் கையில் கொள்.

நீ ஒரு தராளமாகலாம் குயவனின் மட்கலமாய் நீ இருந்தபோதினும்.

தனக்கே தான் ஆணையிட்டுக் கொளாதவன்

பிறரின் ஆணை பெறுவோனாய் ஆவான்.

அவர்கள் உன்னைக் களிமண் கொண்டு வார்க்கும் பொழுது,

அன்பும் அச்சமும் அவர்கள் செய்வதில் சேர்க்கப் பட்டன.

(அவ்வச்சம் யாதெனில்) இவ்வுலக, மறுஉலக அச்சம், இறப்பின் அச்சம்.



மண்ணகத்திலும் விண்ணகத்திலுமுள்ள வேதனைகள் அனைத்தையும் பற்றிய அச்சம் :

செல்வங்கள் மேலும் அதிகாரங்கள் மேலும் பிரியம், நாட்டின் மீது அன்பு,

தன் மீது, உற்றார் உறவினர்மீது, மனைவி மீது அன்பு.

களிமண் நீருடன் கலந்தமைந்த மனிதன் சுகத்தின் மீது அன்பு கொள்ளுகிறான்,

கேட்டிற்குத் தனை ஒப்புவித்துவிட்டான், தீமையில் மயக்குண்டு.

''அவனைத் தவிர்த்து வேறு
இறைவன் இலை''

எனும் கோலை நீ வைத்திருக்கும் காலம் வரை,

நீ அச்சமெனும் மாய மந்திரத்தையும் தகர்த்தெறிவாய்.

தன் உடலில் உள ஆன்மாவைப் போல் இறைவனைக் கொளும் ஒருவன்.

அவனுடைய பிடரி அகங்காரத்தின் முன் வளைந்திராது.

அச்சம் அவன் நெஞ்சத்தில் புகும் வழி காணாது,

அவன் உளம் அல்லாஹ்வைத் தவிர்த்து வேறு எவர்க்கும் அஞ்சாது.

''லா'' எனும் பல தெய்வ மறுப்பின்* உலகில் வதியும் எவரும்

மனைவி, மக்கள் எனும் சிறையிலிருந்து விடுபட்ட வர்களாக இருக்கின்றனர.

அவர் இறைவனைத் தவிர்த்து மற்றவையனைத் திலிருந்தும் தம் பார்வையை அகற்றிவிடுகிறார்.

**தம் புதல்வரின் கழுத்திலே கத்தியை வைக்கிறார்.

தனித்தவராயினும் அவர் தாக்குதலில் ஒருதானை யனையார்.

வாழ்க்கை அவரின் விழிக்கு வளியினும் மிக மலி வாகும்.

லாயிலாஹ இல்லல்லாஹு என்று நம்பிக்கை கொள்ளுவது சுப்பி எனில் (ஐங்கால வணக்கம்) அதனுள்ளி ருக்கும் தரளமாம்.

ஐங்கால வணக்கம், சிறிய புனித யாத்திரையாயத் திகழ்கிறது முஸ்லிமின் உளத்திற்கு.

ஐங்கால வணக்கம் முஸ்லிமின் கையில் ஒரு வாள் போலுமே

★ இறைவனைத்தவிர்த்து வேறு எப்பொருளையும் வணங்க மறுப்பது.

★★ இப்றாஹீம் நபி தம் பிரிய குமாரர் இஸ்மாயிலை பலியிடத் துணிந்த சம்பவம் இங்குச் சுட்டிக் காட்டப்படுகிறது.



ஆபாசம், விரோதம் துர்க்கிரியை இவை கொல்லும் (வாளாகத் திகழ்கின்றன)*

நோன்பு, பசி தாகத்தின் மீது ஒரு தாக்குதல் நடத்து கிறது.

உணர்ச்சியின் கோட்டையை உடைத்தெறிகிறது.

நம்பிக்கையாளரின் ஆன்மாவிற்குள் ஹஜ் எனும் புனிதயாத்திரை ஒளி பெய்கிறது.

அது ஒருவனைத் தன் வீட்டிலிருந்து விலகப் போதிக்கிறது; தன் சொந்த நாட்டின் மீது கொண்டிருக்கும் பற்றை அறுக்கிறது;

அது ஒரு பக்தியின் செயலாம். அதனில் அனை வரும் ஒருவராயிருப்பதற்கு அது ஒரு மூலதனமாகவே இருக்கிறது.

சமய நூலின் இதழ்களை அதுவே இணைத்துப் பிணைக்கிறது.

ஜகாதெனும் ஏழை வரி செலுத்துவது செல்வங்கள் மீதுள்ள அன்பு அகல வழி கோலுகிறது.

அது சமத்துவத்தைப் பழக்கமானதாய் ஆக்குகிறது;

★ ''நிச்சயமாக தொழுகை துர்க்கிரியை ஆபாசமான செயல்களை தவிர்க்கச் செய்கிறது.'' என்ற வேத வசன கருத்து இக்கவியில் தரப்படுகிறது.

''நீங்கள் தா்மமாகச் செலவிடும்வரை'' எனும் இறை வாக்கைக் கொண்டு இதயத்தை அரணிடுகிறது!*

அது செல்வத்தைப் பெருக்கி செல்வத்தின் மீது உள்ள பிரியத்தைக் குறைக்கிறது.

இவையனைத்தும் உனை வலுப்படுத்திக் கொள்ள ஒரு வழிதான்.

நீ வெல்லற் கரியவனாவாய், உன் இஸ்லாம் உர முளதாயிருக்குமானால்,

''ஓ சா்வ வல்லமையுமுள்ள
ஒருவனே!''

எனும் இவ்வணக்கத்திலிருந்து வலிமை பெறுவாய்,

நீ உன் உடலின் ஒட்டகையில் ஏறி ஊரலாம்.**

## 3. தெய்வீகப் பிரதிநிதித்துவம்***

உன்னால் உன் ஒட்டகையை ஆள இயலுமானால் நீ உலகையே ஆளுவாய்

★ ''நீங்கள் விரும்புபவற்றை தா்மமாகச் செலவிடாதவரை நீங்கள் நன்மையை அடையவே முடியாது'' என்ற இறை வசனத்தைக் குறிக்கப்படுகிறது இது.

★★ உடல் இச்சைகளை வெல்லுவதைக் குறிக்கிறது.

★★★ இன்சானே காமில் என்னும் பூரண மனிதன் பற்றி இக்பால் குறிப்பிடுகிறார். ஆன்மீகத்துறையில் பூரணமடைந்து விட்டால் ஒவ்வொரு மனிதனும் ஆண்டவனின் பிரதிநிதி தான்.



உன்றன் தலைமீது சுலைமானின் மெளலியை அணிவாய்.

உலகுள்ளளவும் நீ உலகின் புகழாய் விளங்குவாய்

பயமற்ற அரசில் நீ தனி ஆட்சி புரிவாய்.

இவ்வுலகில் இறையின் பிரதிநிதியாய் இருப்பது இனிமை நிறைந்ததன்றோ.

பூதங்களின் மீது ஆதிக்கம் செலுத்துவதும் இனிமை பொருந்தியதன்றோ.

இறையின் பிரதிநிதியோ பிரபஞ்சத்தின் ஆன்மா அனையாவா்,

அவருடைய உள் பொருள் மிகப்பெரும் பெயரின் நிழலாகும்.

அவா் அறிவாா் பாகம், முழுமையின் இரகசியங்களை,

அவா் அல்லாஹ்வின் ஆணையை அவனிதனில் நிறைவேற்றுகிறாா்.

விரியுலகில் அவா் தன் கூடாரமதைப் பதிக்கும் போழ்தில்

இப்பழம் கம்பளத்தையே சுருட்டுகிறாா்.... *

அவரின் இயற்கையோ வாழ்வுடன் பல்குகிறது, தன்னையே வெளிப்படுத்திக் கொள்ள விரும்புகிறது.

அவா் மற்றொரு வையத்தை அமைப்பாா்.

பாகங்களும் முழுமையகளுமுள இவ்வுலகைப் போல் ஒரு நூறு உலகங்கள்.

★ அவன் தோற்றம் ஒரு யுகத்தின் முடிவைக் குறிக்கிறது.

அவர் கற்பனை வித்திலிருந்து ரோஜா மலர்களை வெளிக்கிளப்புகிறது.

அவர் செம்மையுறா எவ்வியல்பையும் செம்மை செறிந்து முதிர்ந்ததாய் ஆக்குகிறார்,

அவர் கல்லுருவங்களைப் புனிதத் தளத்திலிருந்து அப்புறப்படுத்துகிறார்.

இதய நரம்புகள் அவர் தொட்டால் இசை பெய் கின்றன,

அவர் இறைவனுக்காக மட்டுமே விழிக்கிறார், உறங்குகிறார்.

அவர் யுகத்தற்கு இளமையின் இசையைக் கற்பிக் கிறார்.

ஒவ்வொன்றிற்கும் இளமையின் ஒளியை வழங்குகிறார்.

மனித இனத்திற்கு அவர் உவகை தரும் செய்தி, ஒரு எச்சரிக்கை இவ்விரண்டையுமே கொண்டு வருகிறார்,

அவர் ஒரு போர் வீரர்போலும் தானைத் தலைவர் போலும் அரசிளம் குமரர் போலும் வருகிறார்.

''இறைவன் ஆதமுக்கு எல்லாப் பொருள்களின் பெயரையும் கற்றுக் கொடுத்தான்''

என்பதின் இறுதிக் காரணமாவார் அவர்,*

''தன் ஊழியரை இரவுக்கிரவே கொண்டு சென்ற அவனுக்கே புகழனைத்தும்''

என்தின் உட்பொருளாவார் அவர்.**

★ மிஃராஜைக் குறிக்கிறது.

★★ மூசா (அலை) அவர்களின் கரம்.



அவரின் வெண்கரம் கோலால் வலுவூட்டப்பட் டிருக்கிறது,

அவரின் அறிவு பூரண மனிதர் ஒருவரின் வலிமை கொண்டு முறுக்கேற்றப்பட்டிருக்கிறது.

அத்துணிவுமிகு புரவி வீரர் கடிவாளங்களைக் கையில் பிடிக்கிறபொழுது,

காலப்புரவி கணவேகமாய்ப் பாய்ந்து விரைகிறது.

அவரின் தோற்றம் செங்கடலை வறளச் செய்தது,

அவர் இஸ்ரவேலர்களை எகிப்திலிருந்து அழைத்துச் செல்லுகிறார்.

''எழுவாய்!'' எனும் அவர் குரல் ஒலித்ததும் மரித்த உயிர்களும்

தம் உடற் கல்லறையில் எழுகின்றன களத்தில் கிளம்பும் தேவதாரு மரங்களைப் போல்.

அவர் அனைத்துலகிற்கும் ஒரு பரிகாரமாவார்,

அவரின் பெருமையில் உலகம் காக்கப்படுகிறது.

அவரின் காக்கும் நிழல்தான் அணுவையும் பரிதியுடன் பழக்கமுள்ளதாக்குகிறது.

அவரின் வளஞ்செறி சாரமே இருப்பவை அனைத்தை யும் அருமையானதாய் ஆக்குகிறது.

அவர் தம் வியத்தகு செயல் மூலம் வாழ்வு வழங்கு கிறார்,

அவர் பழைய வாழ்வின் நெறிகளைப் புதுப்பிக்கிறார்.

ஒளி மலி தோற்றங்கள் எழுகின்றன அவரின் அடிச்சுவட்டிலிருந்து,

பல மூசாக்கள் அவரின் சினாய் வழி புகுந்திருக் கின்றனர்,

அவர் வாழ்விற்குப் புதிய விளக்கமொன்றை வழங்கு கின்றார்.

இக்கனவிற்குப் புதிய பொருள் (ஒன்றை அளிக் கின்றார்.)

அவரின் மறைந்திருக்கும் உள் பொருளே வாழ்வின் இரகசியமாகும்,

கேட்காத வாழ்வின் குழல் பொழி இசையாகும்.

இயற்கை கடுமையாகக் குருதியில் வேலை செய்கிறது

அவர் குணநலம் அமைந்த இயல்பில் ஒரு இணக்கம் அமைக்க.

நம் கையளவு மண் சிகரம் சேர்ந்துவிட்டது,

ஏனெனில் இந்தப் புழுதியிலிருந்து அந்தத் தலைவன் எழலாம் என்பதற்காக!

நம்முடைய இன்றைய தினமெனும் சாம்பல்களின் மத்தியில் துயிலுகிறது

உலகையே எரித்து உண்ணத் தகும் நாளைய தினத் தின் தீக்கொழுந்து,

நம்முடைய முகை, ரோஜா மலரின் காவொன்றையே விரிக்கிறது,

நாளைய தினத்தின் உதயத்தால் நம் விழிகள் ஒளி மிக்கதாயிருக்கின்றன.

தோன்றுவாயாக, ஓ, விதி மீது ஏறி சவாரி செய்வோனே!

தோன்றுவாயாக, மாறுதலாகிய இருள் அரசின் ஒளிப் பிழம்பே!

இருத்தலின் காட்சியதனை ஒளிரச் செய்வாய்

எம் விழிகளின் இருளில் உறைவாய்!



மக்களின் கூக்குரலை மௌனமாக்குவாய்,

உன் இசையால் எம் செவியை துறக்கமாக்குவாய்!

எழு, சகோதரத்துவத்தின் இசைக் கருவியை இயக்கு வாய்,

காதல் மதுவின் கிண்ணமதனைத் திரும்பவும் எம்மிடம் கொடுப்பாய்!

உலகிற்கு மீண்டுமொருமுறை அமைதியின் தினங் களைக் கொணர்வாய்,

சண்டையைத் தேடுவோர்க்கு அமைதியின் செய்தியை அளிப்பாய்!

மனித இனம் பயிர்நிலம் எனில் நீயே அறுவடை ஆவாய்,

வாழ்வின் ஒட்டகக் கூட்டம் செல்ல வேண்டிய எல்லையே நீதான்.

கால் காலத்தின் சினத்தால் சிதறிக் கிடக்கின்றன இலைகள்.

ஓ, நீ எம் காக்களை இளவேனில் காலம் போல் கடந்து செல்வாய்!

எங்களின் தரை அணுகக் குனிந்த நெற்றியிலிருந்து பெற்றுக் கொள்ளுவாய்

மதலைக் குழந்தைகள், வாலை இளைஞர்கள், முதியவர்கள் இவர்களின் வணக்கத்தை!

நாங்கள் கௌரவமடைந்திருப்பது உன்னால்தான்.

மௌனமாய் வாழ்வின் வாதனைகளை அனுபவிக் கின்றோம்.

# 11

அலி (ரலி) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவியவருள் இரண்டாமவர் ஆவர். அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அவர்கள் கொணர்ந்த மார்க்கத்தையும் எதிர்த்த பகை துவைக்க அலி (ரலி) அவர்கள் செய்த தொண்டு ஈடு இணை யற்றதாகும். அதனால் தான் இக்பால் அவர்கள் அலி (ரலி) அவர்கள் ஆற்றிய செயலையும் அலி என்னும் பெயரின் உள் பொருளையும் பெருமையோடு விளக்குகிறார்.

மக்களின மன்னராகிய அலியே முதல் முஸ்லிமாவார்.

காதலுக்கு அலியோ நம்பிக்கையின் கருவூலமாவார்.

அவரின் குடும்பத்தின் மீது பக்தி கொள்ளுவது வாழ்வைக் கொண்டு எனக்கு உணர்வூட்டுகிறது.

எனவேதான் நான் ஒளிரும் முத்தையொத்திருக் கிறேன்,

நாணல்போல் நான் காண்பது கொண்டு பரவசத்தால் கட்டுண்டிருக்கிறேன்;

நறுமணம்போல் நான் அவரின் களிப்புத் தரும் கா வழியே அலைந்து கொண்டிருக்கிறேன்.

என் மண்ணிலிருந்து புண்ணிய நீர் பீரிட்டுப் பொழிந் தால், அவரே என் ஊற்றாவார்;

என் திராட்சைக் கனிகளிலிருந்து நறவு சொரிகிற தென்றால் அதற்கு அவர் தாம் காரணமாவார்.

நான் புழுதிதான், ஆனால் அவரின் பரிதி என்னைக் கண்ணாடிபோல் ஆக்கிவிட்டிருக்கிறது.



கீதத்தை என் நெஞ்சத்தில் காணமுடியும்.

அலியின் வதனத்திலிருந்துதான் ஆண்டவன் தூதர் பல நல்ல சகுனங்கள் பெற்றிருக்கின்றார்கள்.

அவரின் மகிமையால் உண்மையான சமயம் புகழ் அடைந்திருக்கிறது.

அவரின் கட்டளைகளோ இஸ்லாத்திற்கு வலிமை யல்லவா?

அவரின் குடிக்கு எல்லாப் பொருளும் மரியாதை செய்கின்றன.

அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அவருக்கு 'பூதுராப்' என்னும் பெயர் அளித்தார்கள்.

ஆண்டவன் தன் மறையில் அவரை ''அல்லாஹ்வின் கரம்'' என்றழைத்தான்

வாழ்வின் இரகசியமறிந்த அனைவருமே

அறிவார்கள் அலி எனும் பெயரின் உட்பொருள் என்ன வென்பதை.

உடலம் எனப் பெயர் பெறும் கரிய களிமண்.

அதன் அநீதிக்காக காலமெலாம் பிரலாபிக்கிறது நம் அறிவு.

அதன் காரணமாக நம்முடைய வான் எட்டும் எண்ணங்கள் மண்ணின்மீது வருந்தி அலைகின்றன.

அது நம் விழிகளைக் குருடாக்குகிறது, நம் செவி களைச் செவிடாக்குகிறது.

அது தன் கரத்தில் இழி இச்சை எனும் இரு முனை வாளை வைத்திருக்கிறது.

இக்கொள்ளைக்காரனால் பிரயாணிகளின் இதயங்கள் பிளக்கப்படுகின்றன.

இறைவனின் அரியான அலி அவர்கள் உடலின் களிமண்ணை அடக்கினார்,

இக்கரிய மண்ணைப் பொன்னாக்கினார்.

முர்தஸாவாகிய அவரின் வாளாலேயே உண்மையின் ஒளி வெளியானது.

அவருக்கு பூதுராப் எனும் பெயர் இடப்பட்டது அவர் உடலின் மீது கொண்ட வெற்றிக்காகத்தான்.*

மனிதன் நிலத்தை வெல்கிறான் களத்தில் (காட்டும்) வீரத்தால்,

ஆனால் அவனுடைய ஒளிமிகு மணி, தன்னையே வெல்லுவதுதான்.

எவர் இப்பூலகில் ஒரு பூதுரபாகின்றனரோ

அவர்கள் கதிரவனை மேற்கிலிருந்து திருப்பிவிடு கின்றனர்;**

உடலமெனும் புரவிக்கு இறுகச் சேணம் பூட்டும் எவரும்

ஆதிபத்திய முத்திரையின் மீது விளிம்பால் பிணைப் புறும் கல்போல் அமர்கின்றனர்;

ஈங்குக் கைபரின் வலிமையே அவரின் காலடியின் கீழ் இருக்கிறது,***

---

★ பூதுராப் - மண்ணின் தந்தை, அலி (ரலி) அவர்களின் மற்றொரு பெயர்.

★ அலி (ரலி) அவர்கள் செய்த அற்புதமாகக் கூறப்படுகிறது.

★★ கைபரை அலி (ரலி) அவர்கள் பெருவீரம் காட்டி வென்றனர்.



இனிமேல் அவரின் கரம் தான்கௌதாரின் நீரைப் பகிர்ந்தளிக்கும்.*

தன்னறிவு மூலம்தான் அவர் இறைவனின் கரம்போல் செயல் புரிகிறார்,

இறைவனின் கரமாய் இருக்கும் தன்மையால் அவர் அனைத்தின் மீதும் ஆட்சி செலுத்துகிறார்.

அவரின் உடலமே அறிவியல் நகரின் நுழைவாயி லாகும்.**

அரேபியாவும், சீனாவும் கிரீஸும் அவருக்கும் அடங்கியிருக்கின்றன.

நீ, உன் திராட்சைக் கனிகளிலிருந்து தூய நறவை அருந்துவாயானால்,

நீ, உன் சொந்த மண்மீதே அதிகாரம் செலுத்த வேண்டியது அவசியமாகும்.

மண்ணாய்ப் போவது விட்டிலின் கோட்பாடாகும்;

மண்ணை வெல்லுபவனாய் இரு. அது ஒன்றே ஆண் மகனுக்கு அழகாகும்.

ரோஜா மலர் போல் மென்மையாயிருப்பவனே! கல்லைப் போல் கடினமாகுவாய்,

நீ காவினுடைய சுவரின் அடிக்காலாய் இருக்கலாம் என்றால்!

உன் களிமண்ணை ஒரு மனிதனாய்ச் சுமை!

---

★ சுவர்க்கத்து ஆறு

★★ நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர் ''நான் அறிவின் நகர், அலி அதன் வாயில்'' என்று.

உன் மனிதனை ஒரு வையமாய் சமை!

உன் சொந்த மண் கொண்டு உன் சுவரையும் கதவையும் கட்டவில்லையெனில்

உன் மண்ணிலிருந்து, எவராவது ஒருவர் செங்கல் கள் செய்து விடுவார்.

ஓ, இறைவனின் கொடுமை பற்றிக் குறை கூறு பவனே,

கல்லின் அநீதியை எதிர்த்துக் கதறும் பளிங்குக்கு உரியவனே.

எவ்வளவு காலத்திற்கு இந்த ஓலமும், கதறலும், பிரலாபமும்?

எவ்வளவு காலத்திற்கு இந்த ஒழியா மாரடிப்பெல் லாம்?

வாழ்வின் சாரம் செயலில் செறிந்திருக்கிறது.

படைப்பதில் களிகூர்வது வாழ்வின் விதியாகும்.

எழுவாய், புத்துலகொன்றை அமைப்பாய்!

தீக்கொழுந்துகளில் மூழ்குவாய், ஓர் இபுராகீமாய் இருப்பாய்!''*

உன் காரியங்களுக்குச் சாதகம் புரிய இவ்வுலகுடன் இணங்கிப் போவதென்பது

அமரின் களத்தில் வைத்து உன் கேடயத்தை வீசி எறிவதாகும்.

★ நம்ரூத் இபுராகீம் (அலை) அவர்களைத் தீக்கொழுந்தில் தூக்கி எறிய அவர்கள் மலர்க்காவிலிருந்து வெளியே வந்தார்கள்.



தன் மீது தானே எஜமானாயிருக்கும் வழுவா ஒழுக்கம் கொண்ட மனிதன்

அதிருஷ்டம் தனக்கு அநுகூலமாய் இருப்பதாய்க் காண்பான்.

உலகம், அவன் சுபாவத்திற்கு இணங்காவிடில்

அவன் வானுடன் பொருது பெறும் துயரை முயலு வான் ;

அவன் அண்ட கோளங்களின் அடிக்காலைத் தோண்டுவான்.

அதன் துகள்களைப் புதிய அச்சொன்றில் வார்த் தெடுப்பான்.

அவன் காலத்தின் போக்கையே மாற்றியமைப்பான்.

நீலவான வெளியை மோதித் தகர்ப்பான்.

தன் வலியாலே அமைப்பான்.

அவனுக்கு இன்பம் நல்கும் புத்துலகொன்றை அமைப் பான்.

ஒருவன் இவ்வுலகில் ஒரு மனிதனுக்கேற்ற முறை யில் வாழ இயலாவிடில்,

பிறகு அவன் வீரனைப்போல் இறப்பதே வாழ் வாகும்.

ஒழுங்கான உள்ளம் பெற்றவன்.

தன் வலிமை எண்பிப்பால் பெருஞ் செயல் கொண்டு பரீட்சிப்பான்,

அன்பைக் கடினமான வேலைகளில் பயன்படுத் துவது இனிமையானதுதான்.

இபுராகீமைப் போல் தீக்கொழுந்துகளிலிருந்து மலரைச் சேகரிப்பது மகிழ்ச்சி மிக்கதுதான்.

செயல்வீரர்களின் திறன்களானவை

கடினமானது எதுவோ அதனை விருப்புடன் ஏற்பதில் வெளிப்படுத்தப்படுகின்றன.

கீழான உயிர்கட்கு உரோஷத்தைத் தவிர்த்து வேறு ஆயுதம் கிடையாது,

வாழ்க்கைக்கு இந்த ஒரேயொரு சட்டம் தான் உண்டு.

வாழ்க்கையானது வெளிப்படுத்தப்பட்ட வலிமை யாகும்.

அதன் முதுகெலும்போ வெற்றி பெற வேண்டு மென்ற விருப்பமாகும்.

காலம் கடந்த கருணையானது உயிர்க் குருதியைக் குளிர்விப்பதுவாம்,

வாழ்க்கைக் கீதத்தின் தாளத்தில் ஒரு முறிவு.

அவமானத்தின் ஆழங்களில் மூழ்கியிருக்கும் எவனும்

தன் பலவீனத்தை மனதிருப்தி என்று அழைக்கின்றான்.

பலவீனம் வாழ்க்கையின் கொள்ளைக்காரன்,

அதன் கருப்பை அச்சங்களையும் பொய்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது.

அதன் ஆன்மா ஒழுக்கங்களின்றி வெறுமையாய் இருக்கிறது,

தீயொழுக்கங்கள் அதன்பால் மாந்திக் கொழுத்துப் போகின்றன,



ஓ, நேரிய முடிவுக்கு வரும் மனிதனே, எச்சரிக்கையா யிருப்பாயகா.

கெடுக்கும் இத்தீமை, புதரில் மறைந்து கொண்டிருக் கிறது,

நீ அறிவுள்ளவனாயிருந்தால் அதனால் ஏமாற்றப் பட்டவனாயிராதே.

பச்சோந்தியைப் போன்று அது கணத்திற்குக் கணம் தன் நிறத்தை மாற்றிக் கொள்ளுகிறது.

கூர்ந்து பார்ப்பவரால் கூட அதன் அமைப்பை அறிந்து கொள்ள இயலுவதில்லை.

அதன் வதனத்தின் மீது திரைகள் போடப்பட்டுள்ளன.

அது இப்பொழுது இரக்கத்தாலும், அடக்கத்தாலும் முக்காடிட்டிருக்கிறது,

அது இப்பொழுது மனிதத் தன்மையின் ஆடையை அணிந்திருக்கிறது.

சிலவேளைகளில் அது வற்புறுத்தலால் உருமாறுகிறது,

சில வேளைகளில் மன்னித்தலில் மறைந்துவிடு கிறது.

உரமிக்க மனிதனின் இதயத்திலிருந்து துணிச்சலைக் களவாடி விடுகிறது.

வலிமையும் உண்மையும் இரட்டைக் குழந்தை களாகும்;

நீ உன்னை அறிவாயானால், வலிமையானது, உண்மையை விளக்கும் கண்ணாடியாகும்.

வாழ்க்கை வித்தென்றால் வலிமை பயிராகும்:

வலிமையே மெய், பொய்யின் இரகசியத்தை விவரிக்கிறது,

உரிமைக்காக வாதிடும் ஒருவன் வலிமை பெற்றிருப்பானானால்,

அவன் தன் உரிமையை நிறுத்த வாதிட வேண்டிய தேவையேயில்லை.

பொய், வலிமையிலிருந்து உண்மையின் உரத்தைப் பெறுகிறது,

பொய்யாக்கப்படுவதால் உண்மை தன்னையே தான் உண்மையெனக் கருதுகிறது.

அதன் ஆக்கும் சொல்லோ ஆலத்தை அமிழ்தாய் மாற்றுகிறது;

அது நல்லதைப் பார்த்துக் கூறுகிறது ''நீ கெட்டது'' என்று, நல்லது கெட்டதாய் ஆகிவிடுகிறது,

ஓ, உன்னிடம் ஒப்படைக்கப்பட்ட பொருளைப் பற்றி அக்கறையில்லாதவனே,

உன்னை ஈருலகிலும் மேலாய்க் கருதுவாயாக!

வாழ்க்கையின் இரகசியங்கள் பற்றிய அறிவைப் பெறுவாயாக!

ஒரு கொடுங்கோலனாயிரு! இறைவனைத் தவிர்த்து மற்றவையனைத்தையும் புறக்கணித்துவிடு!

ஓ, அறிவார்ந்த மனிதனே, உன் விழிகளை, செவிகளை, ஆதாரங்களைத் திறப்பாயாக!

பின்னர் நீ உண்மையான வழியைக் காணாவிடிலோ என்னைப் பார்த்து நகையேன்.*

★ மஸ்னவி வரிகள்.

# 12

ஆப்கானிஸ்தானத்து கஸ்னா நகரின் சூபிஞானியான அலி ஹுஜ்வீரியை மெர்வ் நகர இளைஞர் ஒருவர் வந்து சந்தித்தார். அந்த இளைஞர் தாம் பகைவர்களால் பயமுறுத்தப்படுவதாய்க் கூறியபோது அலி ஹுஜ்வீரி அவர்கள் அவருக்குக் கூறிய அறிவுரைகள் அடங்கியுள்ளன இந்த அத்தியாயத்தில்.

ஹுஜ்வீர் முனிவர் மக்களால் அதிகம் மதிக்கப்பட்டவர்.

அவரின் கல்லறையை பீரேசஞ்சார் எனப்படும் காஜா அஜ்மீரி அவர்கள் சென்று கண்டார்கள் ஒரு யாத்திரிகரைப் போல!

எளிதாய் அவர் மலையரண்களைத் தகர்த்து வீழ்த்தினார்.

இஸ்லாத்தின் வித்தை இந்தியாவில் விதைத்தார்.

அவரின் தெய்வீகத் தன்மையால் உமரின் யுகம் திரும்பியது.

உண்மையின் புகழ் அவரின் சொல்லால் உயர்ந்தது.

அவர் குர்ஆனுடைய கண்ணியத்தின் பாதுகாவலராவார்.

அவரின் பார்வை பட்டதுமே பொய்மையின் இல்லம் அழிந்து வீழ்ந்தது.

அவரின் மூச்சுப்பட்டதுமே பஞ்சாபின் புழுதி உயிர்த்தெழுந்தது,

அவரின் பரிதியால் நம் இதயத்தில் ஒளி நிரம்பியது.

அவர் ஒரு காதலர்; அதன் மேலும் காதலின் ஒரு தூதுவர்!

காதலின் இரகசியங்கள் அவரின் புருவத்திலிருந்து ஒளிர்ந்தன.

அவரின் பூரணத்தைப் பற்றி நான் ஒரு கதை கூறுவேன்.

ஒரு ரோஜா மலர்ப் பதிக முழுதையுமே ஒரேயொரு முகையுள் வைத்து மூடுவேன்.

இளைஞன் ஒருவன், சைப்ரஸ் மரம்போல் வளர்ந்தவன்.

மெர்வ் நகரிலிருந்து லாகூருக்கு வந்தான்.

மதிக்கத்தக்க அம்மா முனிவரைக் காணச் சென்றான்.

கதிரவன் அவனுடைய காரிருளைச் சிதறடிக்கலாம் (என்னுடன் நம்பிக்கையுடன்)

''நான் பகைவரால் சூழப்பட்டுள்ளேன்'' என்றான் அவன்;

''நான் கற்களினிடை அமை கண்ணாடி போல் உளேன்.''

எனக்குக் கூறுங்கள் தெய்வீக நிலையுற்ற பெருந்தகையே,

எவ்வாறு நான் பகைவரிடை என் வாழ்வைக் கழிப்பது என்பதை!''



அறிவுமிக்க அவ்வாணையாளர் அவரின் இயல்பிலோ

அன்பு, மகத்துவத்துடன் அழகை இணைத்திருந்தது.

அவர்கள் விடையிறுத்தார்கள்: ''நீ வாழ்க்கைக் கலையைக் கற்காதவனாயிருக்கிறாய்.

அதன் இறுதி, துவக்கம் பற்றிய அக்கறையின்றி,

பிறர் பற்றிய அச்சமின்றியிருப்பாயாக!

நீயோர் உறங்கிக்கொண்டிருக்கும் ஆற்றலாவாய், விழித்தெழுவாய்!

கல், தன்னைக் கண்ணாடியாய்க் கருதிய பொழுது

அது கண்ணாடியாகி உடைதலின் வழியில் புகுந்தது.

பிரயாணி தன்னை பலவீனனாய்க் எண்ணிக்கொளும் பொழுது,

அவன் தன் ஆன்மாவைக் கொள்ளைக்காரனுக்கு வழங்கி விடுகிறான்.

எத்துணை காலம் நீ உன்னைத் தண்ணீராயும் களிமண்ணாயும் கருதிக்கொள்ளப் போகிறாய்?

உன் களி மண்ணிலிருந்து அனற் கொழுந்தெரியும் சினாய் ஒன்றை அமைப்பாய்!

ஏன் பலமுள்ளவர் மீது சினமுள்ளவனாயிருக்கிறாய்?

ஏன் பகைவர் பற்றிக் குறை கூறுபவனாயிருக்கிறாய்,

நான் உண்மையைக் கூறுவேன்: உன் பகைவன் உன்னுடைய நண்பன்தான்;

அவன் இருப்பது உன்னைப் புகழ்கொண்டு முடிசூடுகிறது.

அகமியத்தின் நிலைதமை அறிபவன் எவனும்

வலிமிகு பகைவனை இறையளி கொடையாய்க் கொள்ளுகிறான்.

மனிதனின் வித்திற்குப் பகைவன் ஒரு நீர் கொள் முகில் போல்வான்.

அதன் திறன்களைத் தட்டி எழுப்புபவன் அவன்தான்.

உன் உணர்ச்சி உரமாயிருந்தால், உன் வழியிலுள கற்களெலாம் நீர் போலாகு;

சாலையிலுள்ள மேடு பள்ளங்களின் தாரையைத் தகர்ப்பது யாது?

தீர்மானமெனும் கூர்வாளானது சாலையிலுள்ள கற் களால் சாணையிடப்படுகிறது.

படிப்படியாகப் பயணம் செய்யும்பொழுது அதன் கூர்மை பரீட்சிக்கப்படுகிறது.

விலங்கைப் போல் உண்டு உறங்குவதில் யாது பயன் உள?

உன்னிலே நீ உரம் பெறாவிடில் வாழ்வதில் யாது பயன் உள?

நீ, அகமியத்தைக் கொண்டு உன்னை வலுப் படுத்திக் கொள்ளும் பொழுது,

நீ விரும்பினால் உலகையே ஒழித்துக்கட்டி விடு வாயே.

நீ இறந்துவிட விரும்பினால் அகமியத்திலிருந்து விடுதலையாகிக் கொள்;

நீ வாழ விரும்பினால் அகமியத்தால் உன்னை



நிரப்பிக்கொள்!

இறப்பென்றால் என்ன? அகமியத்தை மறப்பிப்பது தான்.

ஏன் கற்பனை செய்கிறாய் அது ஆன்மாவும் உடலும் பிரிவதாகும்.

அகமியத்தில் நிலைத்து நிற்பாய், யூசுபைப் போல்!

சிறையிருப்பிலிருந்துப் பேரரசுக்கு முன்னேறிச் செல்லுவாய்!

அகமியத்தைப் பற்றிச் சிந்திப்பாய், அருஞ்செயல் வீரனாயிருப்பாய்.

இறைவனின் ஆளாயிருப்பாய், இரகசியங்களை உள்ளுக்குள் கொண்டிருப்பாய்!

நான் கதை மூலம் விஷயத்தை விளக்குவேன்,

என் மூச்சுக் காற்றின் வலிமையால் மலர் முகையை அவிழ்ப்பேன்.

''ஒரு காதலரின் இரகசியமானது சிறப்பாமே
பிறரின் இதழ்களால் புகலப்படுவதே.''

## 13

நீர் வேட்கையால் சோர்ந்து போன பறவை ஒன்றின் கதை இது. ஆழிய கருத்துக்கள் அடங்கியது.

பறவை ஒன்று தண்ணீர்த் தாகத்தால் தவித்துச் சோர்ந்தது,

அதன் உடலுள் மூச்சு புகையின் அலைகள் போல் எழுந்து கொண்டிருந்தது.

(அப்பொழுது) அது காலில் வைரக்கல்லொன்றைக் கண்டது :

அது நீர் போன்ற தோற்றம் தந்தது,

கதிரொளியொத்த அக்கல்லால் ஏமாற்றப்பட்டு

அதனை அந்த முட்டாள் பறவை நீர் என்றே நினைத்தது.

அந்த மணியிலிருந்து ஈரம் கூட அதற்கு கிடைக்க வில்லை:

அது தன் அலகால் அதனைக் கொத்தி எடுத்தது, ஆனால் அதுவோ அதன் வாயின் அண்ணத்தைக் கூட நனைக்கவில்லை.

''ஓ, வீணாசையின் அடிமையே'' என்றது வைரம்.

நீ உன் பேராசையுள்ள அலகை என் மீது உராய்ந்து கூராக்கிக் கொண்டிருக்கிறாய்.

ஆனால் நான் ஒரு பனித்துளி அல்ல, எனவே நான் உனக்கு அருந்த நீர் அளிக்க இயலாது,



நான் பிறருக்காக வாழவில்லை.

நீ என்னைத் துன்புறுத்துவாயோ? பைத்தியம்தான் நீ!

அகமியத்தை வெளிப்படுத்தும் வாழ்வு உனக்குப் புதியதாயிருக்கிறது.

என்னுடைய நீர் பறவைகளின் அலகுகளை நடுங்கச் செய்யும் மனிதனுடைய வாழ்வின் மணியை நொறுக்கி விடும்.''

பறவை வைரத்திலிருந்துத் தன் மனவிருப்பம் நிறைவேறப் பெறவில்லை.

எனவே ஒளிரும் அக்கல்லை விட்டுவிட்டுத் திரும்பி விட்டது.

ஏமாற்றம் அதன் நெஞ்சத்தில் பீரிட்டது,

அதன் ரோஜாக் கொழுந்தின் மீது பனித்துளியொன்று

குயிலின் விழியில் பொலியும் நீர்த் திவலை போல் சுடர்விட்டது:

அதன் சுடர் அனைத்திற்கும் காரணம் பரிதிதான்.

ஆதவன் மீதுள்ள அச்சத்தால் அது நடுங்கிக் கொண்டிருந்தது.

வானில் பிறந்த ஓய்விலாத விண்மீன் ஒன்று

பார்க்கப்பட வேண்டுமென்ற விருப்பத்தில் ஒரு கணம் நின்றது;

முகையாலும் மலராலும் பலமுறை ஏமாற்றப்பட்டு,

அது வாழ்விலிருந் எதனையும் பெறாதிருந்தது.

ஆங்கு அது தொங்கியது, விழுவதற்கு ஆயத்தமாய்

தன் காதலியை இழந்து விட்டிருக்கிற காதலன் ஒருவனுடைய இமைகள் மீது துடிக்கும் கண்ணீர்த் திவலை போல்.

கொடுந் துயருற்ற அந்தப் பறவை ரோஜாப் புதரின் கீழ்ப் பாய்ந்தது,

பனித்துளி அதன் வாயினுள் துளியாய் நழுவி விழுந்தது.

ஒ, பகைவரிடமிருந்து உன் ஆன்மாவைப் பெறும் நீ,

நான் உன்னைக் கேட்கின்றேன் - நீ ஒரு நீர்த்துளியா, அல்லது சுடர்மணியா?

அந்தப் பறவை தாகத் தீயில் உருகிய போழ்து,

அது மற்றொன்றின் வாழ்வைப் பயன்படுத்திக் கொண்டது.

பனித்துளி கடினமாயும் மணிபோலும் இருக்க வில்லை;

வைரத்திற்கு ஓர் உருவம் உண்டு, ஆனால் துளிக்கு ஒன்றுமே கிடையாது

அகமியத்தைக் காத்துக் கொள்வதில் ஒரு கண மேனும் நீ கவனமிலாது இருந்துவிடவேண்டாம்:

ஒரு வைரமாயிரு, நீர்த் துளியாய் இருக்க வேண்டாம்.

மலைகளைப் போல் இயல்பினல் நன்கு பருத்திருப் பாய்,

உன் தலையின் முடிதனிலே மழைநீர் கொண்ட ஒரு நூறு மேகங்களைத் தாங்குவாய்!

அகமியம் இருப்பதாய்க் கொள்ளுவதன் மூலம் உன்னைக் காத்துக் கொள்ளவாய்,

உன் பாதரசத்தை வெள்ளிப் பாளமாய் இருக்கச் செய்வாய்,

அகமியத்தின் நரம்பிலிருந்து ஓர் இசையை எழுப்புவாய்,

அகமியத்தின் இரகசியமதை வெளிப்படுத்துவாய்!

## 14.

கரியிலிருந்துதான் வைரம் உற்பத்தி யாகிறது. கரி முதிர்ந்து வைமானதும் இரண்டிற் கும் இடையிலுள்ள வேறுபாடு அதிகமாகிறது. இதனை விவரிக்கிறது இந்த அத்தியாயம்.

இப்பொழுது நான் உண்மையின் இன்னுமொரு வாயிலைத் திறக்கப் போகிறேன்,

உனக்குப் பிறிதொரு கதையைக் கூறப்போகிறேன்.

சுரங்கத்திலிருந்த நிலக்கரி வைரக்கல்லிடம் கூறியது

"ஓ, அழியாப் பேரொளி பெற்றவனே,

நாம் தோழர்களாவோம், நம் உட்பொருளும் ஒன்று தான்;

நாமிருக்கும் இடமும் ஒன்றுதான்,

எனினும் நான் ஈங்கு மதிப்பற்ற நிலையில் மனமிகு நொந்து வருந்திச் சாகிறேன்,

நீயோ மன்னர் மன்னர்களின் மணிமுடிகளின் மீது வைக்கப்பட்டிருக்கிறாய்.

என் பண்டமோ மண்ணினும் கீழாய் மதிக்கப்படும் அளவு அத்துணை இழிந்ததாயிருக்கிறது,

அவ்வாறிருக்க உன் எழிலால் கண்ணாடியின் உள்ளமே கிழிக்கப்படுகிறது.

என் இருள் (கரி கொண்டு சூடாக்கப்படும்) கலத்தை ஒளிரச் செய்கிறது,

பின்னரோ என் சாரமே இறுதியில் நீற்றுப் போகிறது.

எவனைப் பார்த்தாலும் என் தலை மீது தன் தாளின் தோலை வைக்கிறான்

என் வாழ்வின் இருப்பைச் சாம்பலால் மூடுகிறான்.

என் விதியைப் பற்றி இரங்க வேண்டியது அவசிய மாகும்;

என் உட்பொருளின் சாரம் என்ன வென்று நீ அறி வாயா?

அதுதான் சுருங்கிச் செறிந்த புகையின் அலையாகும்,

அதனிடம் ஒரேயொரு அனற் பொறியுண்டு.

அமைப்பிலும், இயல்பிலும் நீ விண்மீனை ஒத்திருக் கிறாய்,

உன்னுடைய ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் ஒளிகள் எழுகின்றன.

இப்பொழுது நீ ஓர் அரசனுடைய விழியின் ஒளி யாகிறாய்,

இப்பொழுது நீ வாள் ஒன்றின் கைப்பிடியை அலங் கரித்துக் கொண்டிருக்கிறாய்'.

''ஓ அறிவுள்ள தோழனே! என்றது வைரம்''

இருண்டமண் இறுகிச் செறியும்போது மதிப்பில் ஒரு மணியாய் உயர்கிறது.

அதன் சூழ்நிலைகளுடன் போராடிய பிறகு,

அது அப்போரால் முதிர்ந்துக் கல் போல் கடின மாகிறது.



இந்த முதிர்ச்சிதான் என் உருவிற்கு ஒளி வழங்கி யிருக்கிறது.

என் நெஞ்சத்தை ஒளியால் நிரப்பியிருக்கிறது.

உன் உட்பொருள் முதிராதிருப்பதாலேதான் நீ தாழ்ந் திருக்கிறாய்;

உன் உடலம் மிருதுவாயிருப்பதாலேதான் நீ எரிக்கப் படுகிறாய்.

அச்சம், கவலை, ஆவல் தவிர்த்திருப்பாய்;

கல்லைப் போல் கடினமாயிரு, ஒரு வைரமாயிரு !

எவன் கடினமாய் முயன்று இருக்கமாய்ப் பிடித்துக் கொள்ளுகின்றானோ

அவனால் இரு சொற்களுமே ஒளியுறுகின்றன.

கருங்கல்லின் மூலம் ஒரு சிறு மண்தான்.

அது தன் தலையைக் கஅபாவில் நீட்டிக்கொண்டு விட்டது;

அதன் தரமோ சினாயினும் உயர்ந்ததாகும்,

அது கரு நிறத்தவராலும் அழகுருவினராலும் முத்த மிடப்படுகிறது,

அதன் கடினத் தன்மை வாழ்வின் புகழைக் கொண் டிருக்கிறது;

பலவீனம் வீணாகும், முதிரா நிலையாகும்.''

* *

## 15.

ஷேக், பிராமணர் பற்றிய கதை இது.
அத்துடன் கங்கை நதிக்கும் இமயமலைக்கும்
நடந்து உரையாடலும் உள்ளது.

காசியில் மதிக்கத்தக்க பிராமணர் ஒருவர் வாழ்ந்தார்,

உண்டு இல்லாமை எனும் ஆழியில் தலையை மூழ்கடித்துக் கொண்டிருந்தார்.

அவருக்குத் தத்துவ ஞானத்தில் பெருத்த அறிவிருந்தது.

ஆனால் இறைவனைத் தேடுபவர்களிடமும் அவருக்குப் பிரியம் உண்டு.

இவரின் மனம் புதியப் பிரச்சினைகளை ஆராய்ந்தறிய ஆவல் கொண்டது,

அவரின் அறிவு தாரகைகளின் மட்டத்தில் அலைந்தது;

அவரின் கூடோ, அங்கா பறவையின் கூட்டைப் போல் அத்துணை உயரத்தில் அமைந்திருந்தது;

பரிதியும் திங்களும் அவருடைய சிந்தனையின் தீக்கொழுந்தில் புகையெழப்போடும் பூண்டைப்போல் எறியப்பட்டன.

நீண்டகாலம் அவர் உழைத்தார், உடலைப் பிழிந்தார்.

ஆனால் தத்துவ ஞானம் அவரின் கிண்ணத்திற்கு ஒரு நறவும் கொணரவில்லை.



கல்வியின் காவுகளில் அவர் பல கண்ணிகளை வைத்த போதினும்

அவரின் கண்ணிகள் இலட்சியப் புள்ளியின் தோற்றமதை ஒருமுறை கூடப் பார்க்கவில்லை;

அவரின் சிந்தனை முட்கள் குருதியில் தோய்ந்திருந்தாலும், இல்லாமை என்ற சிக்கலை அவிழ்க்க முடியவில்லை.

அவரின் அதரங்களில் பிறந்த பெருமூச்சுகள் அவரின் சோர்விற்குச் சாட்சியம் கூறின.

அவரின் தோற்றம் தடம் மாறி அவரின் கதை கூறியது.

ஒருநாள் அவர் முதிர்ச்சி பெற்ற ஷெய்கு ஒருவரைச் சென்று கண்டார்,

அவர் தன் மார்பில் வளம் பெற்ற இதயம் பெற்ற மனிதர் ஆவார்.

பிராமணர் தம் அதரங்களின் மீது மௌனத்தின் முத்திரையைப் பதித்தார்;

தம் செவியை அப்பெரு ஞானியின் உரையாடலுக்கு அளித்தார்.

பிறகு ஷெய்கு கூறினார்: “ஓ, உயர் வானில் அலைவோனே,

சிறிதளவு, மண்ணகத்திற்கு உண்மையாயிருப்பதாய்ப் பிரமாணம் செய்வாய்!

நீ விசாரணை எனும் வனமதில் உன் வழியைத் தவற விட்டிருக்கிறாய்,

அச்சமறு உன் சிந்தனை விண்ணகத்தையும் கடந்து சென்றிருக்கிறது.

ஓ, வான் பிரயாணியே, மண்ணகத்துடன் இணங்கி யிருப்பாய்!

தாரகைகளின் சாரத்தைத் தேடி அலைய வேண்டாம்!

உன் விக்கிரகங்களை விட்டு விடும்படி நான் உனக்கு ஆணையிடவில்லை.

நீ நம்பிக்கை கொளாதவனா, அப்படியானால் நம்பிக்கையின்மையின் சின்னத்திற்குகந்தவனாயிருப்பாய்!

ஓ, தொல்கலைப் பண்பின் உரிமைக்காரனே (வாரிசே),

உன் முன்னோர்கள் நடந்த பாதையை விட்டு உன் முதுகைத் திருப்பிட வேண்டாம்!

ஒரு மக்களின் வாழ்க்கையானது ஒற்றுமையில் இருந்துப் பெறப்படுமாயின்

நம்பிக்கையின்மையும் கூடத்தான் ஒற்றுமையின் பிறப்பிடமாகும்.

ஒரு முழு நாத்திகனாயில்லாத நீ

ஆவியின் கோயிலில் வணங்குவதற்கும் தகுதியற்ற வனாகியிருக்கிறாய்,

நாமிருவரும் வணக்கத்தின் சாலையிலிருந்து வெகுதொலை விலகியிருக்கின்றோம்:

நீ அஸாரிடமிருந்து வெகு தொலை அகன்றிருக் கிறாய், நான் இப்றாகீமிடமிருந்து நெடுந்தூரம் விலகியிருக் கிறேன்.

நம்முடைய மஜ்னூன் லைலாவிற்காகத் துயர ஆழி யில் வீழ்ந்திருக்கவில்லை :

அவன் காதல் பைத்தியத்திலும் பூரணமாயிருக்க வில்லை.



அகமியத்தின் விளக்கு அவியும் போழ்து

வான் அளக்கும் கற்பனையால் யாது பயன்?

ஒரு காலத்தில் மலையின் முன்றானையைப் பிடித்துக் கொண்டு,

இமயமேறுவிடம் கூறியது கங்கையாறு:

''ஓ, நீ படைப்பின் காலை முதற்கொண்டு பனியை அணிந்திருக்கின்றாய்,

நீரோடைகளால் கச்சை கட்டப்பட்டிருக்கும் உரு வினன் நீ,

உன்னை இறைவன் விண்ணக இரகசியங்கள் அறிந்த ஒருவனாய் ஆக்கியிருக்கின்றான்.

ஆனாலோ உன் பாதத்திடமிருந்துப் பெருமித நடை யைப் பறித்துவிட்டான்.

அவன் உன்னிடமிருந்து நடக்கும் ஆற்றலை அகற்றி விட்டான் :

இந்தப் பெருமையாலும் சிறப்பாலும் என்ன பயன்?

வாழ்க்கை இடையறா இயக்கத்திலிருந்தல்லவா துள்ளி எழுகிறது;

அசைவே அலையின் முழு வாழ்வையும் அமைக் கிறது.

ஆற்றிடமிருந்து இவ்விகழ் மொழியைக் காதுற்ற பொழுது, மலையோ

அனற்கடல் போல் சினத்துடன் சீறியது,

விடையிறுத்தது: ''உன் விரிநீர்ப் பரப்புக்களே நான் பார்க்கும் கண்ணாடிகள்;

உன்னைப்போல் ஒருநூறு ஆறுகள் என் நெஞ்சுள் உறைகின்றன.

உன்னுடைய இப்பெருமித நடையானது இறப்பின் கருவி அறிவாய்:

அகமியத்திலிருந்து அகன்று செல்லும் எவரும் இறப்பைச் சந்திப்பர்.

உன் விஷயம் பற்றி உனக்கு ஒன்றும் தெரிய வில்லை,

உன் துரதிருஷ்டத்தில் நீ செருக்குறுகிறாய், நீ ஒரு முட்டாள்.

ஒ, சுழலும் வானின் கருப்பையிலிருந்து பிறந்தவனே,

உன் வாழ்வை ஆழிக்கு ஓர் அர்ப்பணப் பொருளாய் அளித்திருக்கிறாய்.

உன் வாழ்வின் கொழுத்தப் பணப்பையை வழிப்பறிக் கள்வனுக்கு வழங்கியிருக்கிறாய்.

காவினுள்ள ரோஜா மலர்போல் தானடங்கியிருப்பாய்

உன் நறுமணத்தைப் பரப்ப வணிகனிடம் செல்ல வேண்டாம்.

வாழ்வது என்பது உன்னிலே வளர்வதுதான்

உனக்குரிய மலர்ப் பதிகத்திலிருந்தே ரோஜா மலர்கள் சேர்ப்பாய்.

யுகங்கள் கடந்துவிட்டன, என்பதாம் மண்ணில் பதிந்திருக்கிறது,

நான், அடைய வேண்டிய எல்லையை விட்டு வெகு தொலைவிலிருப்பதாய் நீ கேலி செய்கிறாயா?

என் உட்பொருள் வளர்ந்து வானை எட்டியது.

ஆனால் முடிச்சுடுகையின் மீது தாரகைகள் தம் தலைதாழ்த்துகின்றன.

என் கண்கள் விண்ணகத்தின் இரகசியங்களைக் காண்கின்றன,



என் செவிகள் அமரரின் சிறகடிப்புக்களை அறி கின்றன.

நான், மாளா உழைப்பின் வெப்பத்தால் ஒளிர்வதனால்

நான் இரத்தினங்களையும், வைரங்களையும் பிற மணி இனங்களையும் திரட்டிக் குவித்தேன்.

நான் உள்ளுக்குள் கல்லாவேன், கல்லிலோ கன லாவேன் :

என் நெருப்பின் மேல் நீர் கடக்க முடியாது!"

நீயொரு நீர்த்துளியா? உன் தாள் தன்னிலேயே உடைந்துவிட வேண்டாம்,

ஆனால் அலைகடலுடன் போராட, மல்லாட முயலு வாயாக,

மணியொன்றின் நீரைவிரும்புவாய், ஒரு மணி யாவாய்!

காதணியாயிருந்து ஆரணங்கு ஒருத்தியை அலங் கரிப்பாய்!

ஓ, உன்னையே விவரித்துக் கொள்வாய், துரிதமாய் இயங்குவாய்!

மின்னல் எறிந்து, மழையின் வெள்ளம் பொழியும் முகிலாயிருப்பாய்!

விரிகடல் உன் புயலுக்காக இரப்பவனைப் போல் கேட்கட்டும்

அதன் முன்றானைகள் நேராயிருப்பது பற்றிக் குறை கூறட்டும்!

அது தன்னை அலையினும் குறைவாய்க் கருதிக் கொள்ளட்டும்.

உன் தாள் வழியே நழுவிச் செல்லட்டும்!

# 16

அல்லாஹ் என்னும் சொல்லை உயர்த்து
வதே முஸ்லிம்களின் வாழ்க்கையின் நோக்க
மாயிருக்க வேண்டும். அல்லாஹ்வுக்காகப்
புரியப்படும் போர் மண்ணாசை கொண்டதா
யிருப்பின் அது தூய சமயத்திற்கே விரோத
மானதுதான்.

அல்லாஹ்வின் வண்ணக் குழம்பு கொண்டு உன் இதயத்திற்கு வர்ணம் இழைப்பாய்,

மதிப்பும் சிறப்பும் அன்பிற்கு வழங்குவாய்!

அன்பின் மூலமே, முஸ்லிமின் இயல்பு அமைகிறது:

முஸ்லிமானவன், அன்பு கொளாவிடில் அவன் ஒரு நம்பிக்கையறு நாத்திகன்தான்.

அவன் பார்ப்பதும், பார்க்காதிருப்பதும் இறைவனையே பொறுத்திருக்கின்றன,

அவன் உண்ணுவதும் அருந்துவதும், உறங்குவதும் இறைவனையே பொறுத்திருக்கின்றன.

அவனுடைய விருப்பில் இறையின் விருப்பம் இழந்து விடப்படுகிறது.

இவ்வுரையை எவ்வாறுதான் மனிதர்கள் நம்புவரோ?''

அவன், ''அல்லாஹ்வைத் தவிர்த்து வேறு இறைவ னிலை'' எனும் களத்தில் தங்கியுள்ளான்;

உலகத்தில் அவன் மனித இனத்திற்கோர் சாட்சி யாவான்



அவனுடைய உயர்ந்தநிலை மனிதர்க்கும் ஜின்னிற் கும் அனுப்பப்பட்ட இறையின் தூதரால் உறுதி கூறப்பட் டிருக்கிறது-

சாட்சியங்களின் மிகவும் உண்மையான சாட்சியம் தான்.

வார்த்தைகளை விட்டுவிட்டு ஆன்மீக நிலையைத் தேடுவாய்,

இறையின் ஒளியை உன் செயல்களாகிய இருளில் பொழிவாய்!

அரசனின் உடையில் பொலிந்தாலும் தர்வேஷைப் போல் வாழ்,

விழிப்புடன் இறையின் தியானத்தில் வாழ்!

நீ புரியும் செயல் எதுவாயினும், இறையை நெருங்கு வதே உன் குறியாயிருக்கட்டும்,

அவன் புகழ் உன்னால் வெளிப்படட்டும்;

அமைதியும் ஒரு தீமையாகும், அதன் நோக்கம் வேறு யாதாயுமிருக்குமானால்;

போரும் சிறந்ததாம்; அதன் நோக்கம் இறைவனாய் இருக்குமானால்.

நம் வாள்களால் இறைவன் உயர்த்தப்படாவிடில்,

போர் மக்களை அகௌரவப்படுத்திவிடும்,

புனித ஷெய்குமியான் மீர்வலி அவர்கள்,

அவரின் ஆன்ம ஒளியில் மறைபொருள் அனைத்தும் வெளிப்படுத்தப்பட்டது -

அவரின் பாதங்கள் முஹம்மதின் பாதையில் இறுகப் பதிந்திருந்தன,

அவர் ஒரு வேய் குழலாவார், காதலின் வெறியேறிய கீதத்திற்கு.

அவரின் கல்லறையே பொல்லாங்கிலிருந்து நம் நகரைக் காக்கிறது.

உண்மைச் சமயத்தின் ஒளிப்பிழம்புகளை நம்மீது ஒளிரச் செய்கிறது.

விண்ணகம் அவரின் வாயிலுக்குத் தலை தாழ்த்தியது,

இந்தியாவின் மன்னர் மன்னர் அவரின் மாணவரில் ஒருவராயிருந்தார்.*

இப்பொழுது அவ்வரசர் தம் இதயத்தில் தகாவிருப்பின் வித்தை விதைத்தார்.

போர் மேற்சென்று நாடு பல கொளத் தீர்மானித்தார்.

வீண் விருப்பின அனற் கொழுந்துகள் அவர் இதயத்தில் பற்றி எரிந்து கொண்டிருந்தன,

''வேறு யாதும் எஞ்சியுளதா?'' இவ்விதம் வினவத்தான் அவர் தம் வாளுக்குக் கற்பித்திருந்தார்,

தக்காணத்திலோ ஒரே போரின் கூக்குரலாயிருந்தது,

அவரின் தானையோ அமர்க்களத்திலே நின்றது,

வானளவு மதிப்பற்ற ஷெய்கிடம் சென்றார் அவர்

அவரின் ஆசிகள் பெறலாம் என்று:

முஸ்லிம் இவ்வுலகிலிருந்து இறைவனிடம் திரும்புகிறான்

கொள்கையைப் பிரார்த்தனையால் வலுப்படுத்துகிறான்.

---

★ ஷாஜஹான்



மன்னர் மன்னனின் உரைக்கு ஷெய்கு மறுமொழி ஒன்றும் கூறவில்லை,

தர்வேஷ்களின் குழுவோ செவி குவித்திருந்தது,

வெள்ளி நாணயம் ஒன்றைக் கையில் கொண்ட மாணவர் ஒருவர்

தம் அதரம் திறந்து, மௌனம் தகர்க்கும் வரை.

''என்னிடமிருந்து இவ்வற்பப் பரிசை ஏற்க'' என்று கூறிக் கொண்டவராய்,

இறையிடம் செலும் நெறி தவறிவிட்ட மக்களின் வழிகாட்டியே!

என் உறுப்புக்கள் உழைப்பின் வியர்வையால் குளிக்கின்றன.

என் முன்றானையில் ஒரு திர்ஹத்தை வைப்பதற்கு முன்.''

ஷெய்கு கூறினார்: நம் சுல்தானுக்குக் கொடுக்கப்பட வேண்டியதாகும் இந்த பணம்,

அவர் மன்னரின் உடைதனைப் புனைந்து கொண்டிருக்கும் இரப்பவர் ஆவார்,

அவர், பரிதி, திங்கள், தாரகைக் கணங்கள் மீது அட்சி புரிந்தபோதினும்

நம் அரசர் மனித இனத்தவரில் கால் காசுகூட இல்லாதப் பரம ஏழையாவார்.

அவரின் கண் அந்நியரின் உணவின் மீது பதிந்திருக்கிறது,

அவரின் பசித் தீயோ முழு உலகொன்றையே விழுங்கிவிட்டது.

அவரின் வாளைத் தொடர்கின்றன பஞ்சமும் பிணியும்,

அவரின் கட்டடமோ விரிநிலமதை வீணிலமாக்கு கிறது

அவரின் வறுமை காரணமாய் மக்கள் கதறிக் கொண் டிருக்கின்றனர்;

அவரின் தரித்திரம் (வெறுங்கைத்தனம்) பலவீணர் களைக் கொள்ளியிடச் செய்கிறது.

அவரின் வலிமை அனைவர்க்கும் ஒரு பகையாகும்:

மனித இனம் ஓர் ஒட்டகைக் கூட்டம், அவர் ஒரு கொள்ளைக்காரர்.

அவர் தம் வஞ்சகத்தில், அறியாமையில்,

அவர் கொள்ளைத் தொழிலை அரசின் பெயரில் அழைக்கிறார்.

அரசரின் படையணியும் பகைவரின் தானைகளும் இவ்விரண்டுமே

அவர் பசியின் வாளால் இருகூறாகிவிட்டன.

இரப்பவனின் பசி அவன் ஆன்மாவையே உண்டு விடுகிறது

ஆனால் சுல்தானின் பசியோ அரசையும் சமயத் தையுமே அழித்துவிடுகிறது.

அல்லாஹ்வைத் தவிர்த்து வேறு எதற்காகவும் வாளை உருவுபவன் எவனோ

அவனுடைய வாள் அவனுடைய மார்பிலேயே புதைந்துவிடுகிறது".

* *

## 17

பாபா சஹ்ராயீ என்று புகழ் பெற்றிருந்த மீர் நாஜாத் நக்ஷபந்தி அவர்கள் இந்திய முஸ்லீம்களுக்குப் பண்ணிய போதனைகளாய் இந்த அத்தியாயத்தை அமைத்திருக்கிறார் அல்லாமா.

ஓ, மண்ணிலிருந்து ரோஜா மலர் போல் வளர்ந் திருப்பவனே,

நீயும் கூடத்தான் அகமியத்தின் கருப்பத்திலிருந்து பிறந்திருக்கிறாய்.

அகமியத்தை விட்டுவிடாதே! அதிலேயே நிலைத்து நிற்பாய்!

ஒரு நீர்த் துளியாயிருப்பாய், விரிகடலையே விழுங்குவாய்!

நீ இருப்பது போல் அகமியத்தின் விளக்கத்தால் ஒளிர்ந்து கொண்டு,

அகமியத்தை வலுவாக்குவாயாகில் நிலைகொள்ளு வாய்

நீ இவ்வாணிபத்திலிருந்து இலாபம் பெறுகிறாய்,

இந்தப் பொருளைக் காப்பதால் நீ வளமடைகிறாய்.

இருத்தல், இல்லாமை பற்றி எல்லாம் நீ பயப்படு கிறாய்.

அன்புள்ள தோழனே! நீ புரிந்து கொண்டது தவறாகும்.

ஏனெனில் எனக்கு வாழ்வின் இணக்கத்துடன் பழக்கமுண்டு.

நான் உனக்குக் கூறுவேன், வாழ்வின் இரகசியம் என்னவென்பதை-

முத்தைப் போல் உன்னுள்ளேயே மூழ்கிக் கொள்ளுவது,

பின்னர் உன் உள்ளமைந்த தனிமையிலிருந்து வெளிப்படுவது;

சாம்பரின் கீழே அனற் பொறியைத் திரட்டுவது,

ஓர் அழல் பிழம்பாய் ஆகி மாந்தரின் விழிதமைக் கூசச் செய்வது.

செல்வாய், நாற்பதாண்டுத் துன்பத்தின் இல்லத்தை எரிவாய்ப்படுத்தவாய்,

உன்னைச் சுற்றியே சுழலுவாய்! ஒரு சுழலும் அழலாயிருப்பாய்!

வாழ்க்கை என்றால் என்ன, பிறரைச் சுற்றித் திரிவதிலிருந்து விடுதலையுற்றிருப்பதாம்,

உன்னையே புனித ஆலயமாய்க் கருதுவதுதான்

உன் சிறகினை அடித்துப் புவியின் கவர்ச்சியிலிருந்து விரைந்தோடுவாய்;

கீழே விழாது தப்பும் பறவைகளைப் போல் இருப்பாய்.

அறிவுடையவனே! நீ ஒரு பறவையாயிராவிடில், குகையின் சிகை மீது கூட்டினைக் கட்டாதே.



ஓ, அறிவைப் பெற அலைபவனே, ரூமின் மூதறிஞரின் தூதொன்றை நான் உனக்குக் கூறுகிறேன்:

''அறிவு, உன் தோள் மீதிருக்குமானால் அது ஓர் அரவமாகும்;

அறிவு, அதனை நீ உன் இதயத்திற்கு எடுத்துச் செல்வாயானால் அது ஒரு தோழனாகும்.''

நீ கேள்வியுற்றிருக்கிறாயா, எவ்வாறு ரூமின்* அதிபதியானவர்.

அலப்போ நகரில் தத்துவ ஞானம் பற்றி அரிய பாடம் கற்பித்தார் என்பதை?-

அறிவார்ந்த நிருபணங்களின் தளைகளில் கட்டுண்டு,

அறிவின் இருண்ட புயல்நிறை திரையின் மீது மிதந்து சென்று;

காதலின் சினாய் மலையால் ஒளியூட்டப் பெறாத ஒரு மூசா,

காதலைப் பற்றியும், காதலின் வெறி பற்றியும் ஒன்றும் அறியார்.

அவர் சந்தேகம் கொள்ளுதல் பற்றியும் பிளேட்டோவின் கொள்கை பற்றியும் உரையாற்றினார்.

மனோதத்துவக் கலையின் ஒளிமிக்க முத்துக்கள் பலவற்றைக் கோத்தார்

அரிஸ்டாட்டிலின் கொள்கையின் சிக்கல்களை அவிழ்த்தார்.

அவரின் சிந்தனை ஒளி மறைவாயிருந்த எதனையும் விளக்கியது,

★ *ஜலாலுத்தீன் ரூமி.*

அவரைச் சுற்றியும் அவர் முன்பும் நூல்களின் குவியல்கள் கிடந்தன, அவையனைத்தின் இரகசிய விளக்கம் அவரின் அதரங்களிலிருந்தது,

ஷம்சே தப்ரீஸ் எனும் ஞானி கமாலுத்தீன் ஜுனைதி என்பாரால் வழிகாட்டப்பெற்று

ஜலாலுத்தீன் ரூமியின் கல்லூரிக்கு வழிதேடினார்.

ஆங்கு உரத்து இரைந்தார், இந்தக் கூக்குரலும் பதற்றமும் எதற்கு?

என்ன இந்தத் தர்க்க வாதங்கள், தீர்ப்புக்கள், ஆதாரங்கள் தேடுதல் எல்லாம்?''

''அமைதியாவாய், ஓ, முட்டாளே'' என்றார் மௌலவி,

மூதறிஞர்களின் கோட்பாடுகளைக் கேலி செய்யாதே.

என் கல்லூரியை விட்டு வெளியேறு!

இது விவாதமும், உரையாடலுமாகும், இவற்றுடன் உனக்கென்ன வேலையிருக்கிறது?

என் உரையாடல் உன் அறிவிற்கு அப்பாற்பட்டதாகும்,

அது அறிவின் பளிங்கியை ஒளிமிக்கதாக்குகிறது,

இச்சொற்கள் ஷம்சேதப்ரீஸின் சினத்தைப் பெருக்கின.

அவரின் ஆன்மாவிலிருந்து நெருப்பை வெடித்து விழச்செய்தன.

அவர் பார்வையின் மின்னல் (இடி) மண்ணின் மீது விழுந்தது,

அவரது மூச்சின் ஒலி புழுதியைத் தீக் கொழுந்துகளாய் துள்ளி எழச் செய்தது.



ஆத்மீகத் தீ அறிவுக் குவியலை எரித்தது.

தூய்மை அந்த தத்துவ ஞானியின் நூல் நிலையத்தை உண்டது.

மௌலவி காதலின் விநோதத்திற்குப் புதியவரானதால்

காதலின் இணக்கம் பற்றி அறியாதவராதலால்,

இரைந்தார்; எவ்வாறு இவ்வெளியை நீ கிளறினாய்;

அது தத்துவ ஞானிகளின் நூல்களை எரித்துவிட்டிருக்கிறதே?

ஷெய்கு மறுமாழி கூறினார், ''ஓ, நம்பிக்கையிலாத முஸ்லிமே,

இது பரவசமும் இன்ப நிலையுமாகும். இதைக் கொண்டு நீ என்ன செய்யப் போகிறாய்?

என் நிலையோ உன் சிந்தனைக்கு அப்பாற்பட்டதாகும்.

என் தீக் கொழுந்தோ காயக்கல்பமாகும்.''

நீ உன் சத்தை, தத்துவ ஞானமெனும் பணியிலிருந்து எடுத்திருக்கிறாய்,

உன் சிந்தனையின் மேகம் ஆலங்கட்டிகளைத் தவிர்த்து வேறு ஒன்றையும் வீசுவதில்லை.

உன் ஒழுங்குறாக் கல்லதனில் அனலைக் கிளறுவாய்,

உன் மண்ணில் ஒரு தீக்கொழுந்தை வளர்ப்பாய்.

உண்மை முஸ்லிமின் அறிவு ஆன்மீக உற்சாகத்தில் தான் பூரணமடைகிறது.

மறைந்து கடந்து செல்வதையெல்லாம் ஒதுக்குவாய் என்பதே இஸ்லாத்தீன் கருத்தாகும்.

இபுராகீமானவர் மறைந்துவிடக் கூடியவற்றின் பற்றிலிருந்துத் தப்பித்த பொழுது,

அவர் தீக் கொழுந்துகளின் மத்தியிலே யாதொரு தீங்குமின்றி அமர்ந்திருந்தார்?

நீ உன் பின்புறமாய் இறைவன் பற்றிய அறிவை எறிந்திருக்கிறாய்

உன் உணவிற்காக உன் சமயத்தை வீசிவிட்டிருக்கிறாய்.

அஞ்சனக்கல்லின் தேடுதலில் மிகவும் மும்முரமாய் இருக்கிறாய்,

உன் கண்ணின் கருமையைப் பற்றி அறியாதிருக்கிறாய்.

வாளின் விளிம்பிலிருந்து வாழ்வின் ஊற்றைத் தேடுவாய்,

கொடும் மலைப் பாம்பின் வாயிலிருந்துத் துறக்கத்தின் ஆற்றைத் தேடுவாய்.

கல்லுரு நிறை இல்லத்தின் காவிலிருந்துக் கருங்கல்லை வேண்டுவாய்,

ஒருவெறிபிடித்த நாயிடமிருந்துக் கத்தூரி மானின் கொப்பூழை வேண்டுவாய்.

ஆனால் இன்றைய அறிவிலிருந்துக் காதலின் ஒளியைத் தேட வேண்டாம்,



இந்த நம்பிக்கையற்ற நாத்திகனின் கிண்ணத்திலிருந்து உண்மையின் இயல்பினைத் தேட வேண்டாம்!

நெடுங்காலம் நான் இங்குமங்கும் ஓடிக் கொண்டிருக்கிறேன்,

புத்தறிவின் இரகசியங்களைப் பயின்றவாறு:

அதனுடைய கோட்டைக் காவலர்கள் என்னைச் சோதனைக்கு ஆளாக்கியிருக்கிறார்கள்.

என்னை அவர்களின் ரோஜா மலர்களுடன் நெருக்கமாக்கியிருக்கிறார்கள்.

ரோஜா மலர்கள், பூவரசு மலர்கள் அவற்றை முகர வேண்டாமென எச்சரிக்கை செய்கின்றன.

காகித மலர்களைப் போல், மணத்தின் பேய்த்தேர்.

இம்மலர்க் காவால் கவரப்பட்டு நான் அடிமைப் படுத்தப்பட்டிருக்கிறேன்.

நான் துறக்க மரத்தின் மீது என் கூட்டினைக் கட்டியிருக்கிறேன்.

புதிய கால அறிவே மிகப் பெரும் குருட்டுத்தனமாகும்-

(அதுவே) விக்கிர வணக்கம், விக்கிரக விற்பனை, விக்கிரகம் சமைத்தல் ஆகும்!

வெளித்தோற்றச் சிறையில் கால்கள் கட்டப்பட்டிருக்கின்றன.

அது உணர்வுள்ளவற்றின் எல்லைகளைத் தாண்டி விடவில்லை.

அது வாழ்வுப் பாலத்தைக் கடக்கும்பொழுது கீழே விழுந்து விட்டது

அது, தன் கழுத்திலேயே கத்தியைப் பாய்ச்சிக் கொண்டது.

அதன் தீ, பூவரசு மலரின் கொழுந்தைப் போல் குளிர்ச்சியாயிருக்கிறது;

அதன் தீக் கொழுத்துக்கள் ஆலங்கட்டியைப் போல் உறைந்திருக்கின்றன.

அதன் தன்மை காதலின் ஒளியால் தொடப்படாம லிருக்கிறது.

அது என்றுமே உவகையற்றத் தேடுதலில் ஈடுபட் டிருக்கிறது.

காதலானது உளப்பிணி போக்கும் பிளேட்டோ வாகும்

மனத்துயர் அதன் ஈட்டியால் குணப்படுத்தப்பட் டிருக்கிறது.

அன்பிற்கு மரியாதை செய்யும் முகத்தான் முழு உலகமுமே தலை தாழ்த்துகிறது,

காதல், அறிவாகிய சோமநாதபுரத்தை வெற்றி கொண்ட மஹ்மூதாகும்.

புதிய கால அறிவியலின் கிண்ணத்தில் இந்தப் பழைய மது கிடையாது,

அதன் இரவுகள் வெறி மிக்க வணக்கத்தின் ஒலி நிரம்பியிலை

நீ, உன் சைப்ரஸ் மரத்தைக் குறைவாய் மதித்திருக் கிறாய்

பிறரின் தருவைப் பெரிதாய்க் கருதியிருக்கிறாய்

வேய் குழலைப் போல் நீ உன் அகமியத்தை அகற்றி, வெறுமையாயிருக்கிறாய்.



ஓ, பிறரின் இசைக்கு உன் இதயத்தைப் பறிகொடுத் திருக்கிறாய்,

ஓ, பிறருடமிருந்து உணவை இரப்பவனே

நீ பிறரின் கடையிலிருந்து உன் உணவைத் தேடு வாயா?

முஸ்லீம்கள் கூடுமிடம் அந்நியர்களின் விளக்கு களால் எரிக்கப்பட்டிருக்கிறது.

அவனுடைய தொழுகைத் தளங்கள் துறவறமாகிய அனற் பொறிகளால் எரிக்கப்பட்டிருக்கின்றன.

மான் மக்காவின் புனித நிலத்திலிருந்து ஓடிய பொழுது,

வேட்டைக்காரனின் அம்பு அதன் மென்னுடலில் பக்கவாட்டில் பாய்ந்து துளைத்துவிட்டது.

ரோஜா மலரின் இதழ்கள், அதன் நறுமணம்போல் சிதறப்பட்டிருக்கின்றன:

அகமியத்திலிருந்து ஓடியவனே, அதனிடம் மீள் வாயாக

ஓ, குர்ஆனுடைய அறிவின் பாதுகாவலனே,

இழந்துவிட்ட உன் ஒற்றுமையை மீண்டும் காண்பாய்!

இஸ்லாத்தின் கோட்டை வாயிலைக் காக்கும் நாம்,

இஸ்லாத்தின் எச்சரிக்கையை அலட்சியப்படுத்தி விட்டு நம்பிக்கையற்ற நாத்திகராகிவிட்டோம்.

பழைய, மதுபரிமாறுபவனின் கிண்ணம் உடைத் தெறியப்பட்டிருக்கிறது,

ஹிஜாஸின் மதுக்கூட்டம் கலைக்கப்பட்டிருக்கிறது.

நம் கல்லுருவங்களால் கஅபா நிரப்பப்பட்டிருக்கிறது.

நாத்திகம் நம் இஸ்லாத்தை இகழ்ந்து பழிக்கிறது,

கல்லுருவங்களின் அன்பிற்காக, நம் ஷெய்கு இஸ்லாத்தைச் சூதாடிவிட்டார்.

பூனூலால் ஒரு செபமாலை செய்துவிட்டார்.

நம்முடைய ஆன்மீக வழிகாட்டிகள் தங்களின் தத்துவத்திற்குத் தம் நரைமயிருக்கே கடன் பட்டவராவர்.

தெருவில் விளையாடும் குழந்தைகளின் கேளிக்கைப் பொருளாயிருக்கிறார்கள்;

அவர்கள் உள்ளங்களில் ''லாயிலாஹ்''வின் முத்திரை எதனையும் கொள்ளவில்லை.

ஆனால் இழி இச்சையெனும் தொழு உருவங்களைக் குடியேற்றுகின்றனர்.

நீண்ட மயிர் கொள் பயல் எவனும் தர்வேஷின் உடையையே அணிகிறான்-

அந்தோ, இந்தச் சமயத்தை விலை கூறும் இவ் வணிகர்கள்!

இரவும் பகலும் மாணவர் தொடரப பயணம் செய்து கொண்டிருக்கின்றனர்,

இஸ்லாத்தின் பெருந் தேவைகள் பற்றிச் சற்றம் கவனம் இல்லாது.

நாணலைப் போல், அவர்களின் விழிகள் ஒளியற் றிருக்கின்றன



அவர்தம் நெஞ்சங்கள் ஆன்மீகச் செல்வமின்றி வெறிச்சென்றிருக்கின்றன,

போதகர்களும் சூபிகளும் எல்லாருமே ஒருவர்போல் உலகினை வணங்குகின்றனர்;

தூய சமயமதின் மதிப்பே அழிக்கப்பட்டிருக்கிறது.

நம் போதகன் தன் விழிதனைப் பணத்தின் மீது பதித்துவிட்டான்.

மார்க்கத்தின் முப்தி (தீர்ப்பளிப்போன்) தன் தீர்ப்பை விற்றுவிட்டான்,

இதன் பிறகு, நண்பர்களே! நாம் யோசனை செய் வதற்கு என்னவிருக்கின்றன?

நம் வழிகாட்டியே மதுக்கடை பக்கம் தன் முகத்தைத் திருப்புகிறாரே.

# 18

## காலம் ஓர் அரியும் வாள்

ஷாபியீ (ரஹ்) அவர்களின் புனிதப் புதைகுழி பசுமை யாயிருக்கிறது,

அவர்களின் திராட்சைக் கொடி முழு உலகையுமே உற்சாகப்படுத்தியிருக்கிறது.

அவரின் சிந்தனை விண்ணகத்திலிருந்துத் தாரகை யொன்றைப் பறித்தது.

அவர் காலத்திற்கு 'அரியும்வாள்' என்று பெயரிட்டார்.

இவ்வாளின் இரகசியம் என்னவென்று நான் எவ்வாறு கூறுவேன்?

அவன் மின்னல் ஒளியன்ன விளிம்பிலேதான் வாழ்விருக்கிறது;

அதன் உரிமையாளர் நம்பிக்கை, அச்சத்திற்கு அப்பால் உயர்த்தப்பட்டிருக்கிறார்.

அவரின் கரம் மூசாவின் கரத்தினும் அதிவெண்மை யாயிருக்கிறது.

ஓரடியில் ஆங்குப் பாறையதனில் நீர் பீரிடுகிறது

ஈரம் அற, திரைகடல் தரையாகிறது.

இவ்வாளினை மூசா தம் கரத்தினில் வைத்திருந்தார்,

எனவேதான் அவர் மனிதற்கியன்றதினும் அதிகமாய் ஆற்றினார்,

அவர் செங்கடலைத் துண்டமாய் விண்டார்



அதன்நீரை உலர்ந்த நிலம் போலாக்கினார்.

கைபர்வீரர் அலியின் கரம் வலிமை கொண்டது இவ்வாளிடமிருந்தே.

வாளின் மாறுதலே பார்க்கத் தகுந்ததாம்,

இரவும் பகலும் மாறுவது விளங்கத் தகுந்ததுவாம்

காண்பாய், ஓ, நேற்று இன்றால் அடிமையாக்கப் பட்டவனே,

வேறொரு உலகினை உன் இதயத்துள்ளேயே பார்!

நீ உன் களி மண்ணில் இருளின் வித்தைத் தூவி யிருக்கிறாய்,

நீ, காலத்தை ஒரு கோடாகக் கற்பனை செய்திருக் கிறாய்:

உன் சிந்தனை காலத்தின் நீளத்தைக் கணக்கிடு கிறது

இரவு, பகலெனும் அளவினைக் கொண்டு.

இந்தக் கோட்டை நீ உன் நாத்திக இடுப்பின் கச்ச மாக்கியிருக்கிறாய்;

நீ கல்லுருவங்களைப் போல், பொய்மையின் விளம்பரகர்த்தனாயிருக்கிறாய்.

நீ காயகல்பமாயிருந்தாய், ஒரு புழுதித் துகளாய் நீ ஆகியிருக்கிறாய்;

உண்மையின் உளச்சான்றாய் நீ பிறந்தாய், நீ ஒரு பொய்யாக ஆகியிருக்கிறாய்!

நீ ஒரு முஸ்லிம்தானா? அப்படியென்றால் இந்தக் கச்சத்தை உரிந்தெறிவாய்!

சுதந்திரமுள்ளவரின் சமய விருந்தில் (ஒளி பொழியும்) மெழுகுவர்த்தியாயிருப்பாய்!

காலத்தின் மூலத்தினைத் தெரியாது,

அழியாப் பெருவாழ்வைப் பற்றி நீ அறியாதிருக்கிறாய்.

எத்துணை காலம் நீ இரவு, பகலின் அடிமையாய் இருக்கப் போகிறாய்?

''நான் இறையின் காலத்தினை யொத்த ஒன்றினைப் பெற்றிருக்கிறேன்'' என்னும் சொற்களிலிலிருந்து காலத்தின் இரகசியமதைப் பயிலுவாய்

காலத்தின் நடையிலேதான் அற்புதம் எழுகிறது,

வாழ்க்கையானது காலத்தின் இரகசியங்களில் ஒன்றாகும்,

காலத்திற்குக் காரணம் கதிரவனின் சுழற்சி அன்று:

காலம் அழிவற்றது, அனால் பரிதியோ என்றும் இருந்து கொண்டிருக்கப் போவதில்லை.

காலம், களிப்பு, கவலை, விழா, நோன்பாம்;

காலமே நிலவு, வெய்யில் இவற்றின் இரகசியமாம்.

நீ இடத்தைப் போல், காலத்தை விரித்திருக்கிறாய்.

நாளைய தினத்திலிருந்து நேற்றைய தினத்தைப் பிரித்திருக்கிறாய்.

நறுமணத்தைப் போல், நீ உன் மலர்வனத்திலிருந்தே ஓடியிருக்கிறாய்;

உன் சிறையை உன் கரம் கொண்டே சமைத்திருக்கிறாய்.

துவக்கமோ, இறுதியோ பெறாத நம் காலம்



நம் மனத்தின் மலர் பதிகத்திலிருந்து முகிழ்த்து அலர்கிறது.

அதன் வேரை அறிவது புது வாழ்வு கொண்டு வாழ உந்துகிறது:

அதன் உட்பொருள் உதயத்தினும் அதிகம் ஒளி பொருந்தியிருக்கிறது.

காலத்திலிருந்து வாழ்வு இருக்கிறது, வாழ்விலிருந்து காலம் இருக்கிறது:

''காலத்தைப் பழிக்க வேண்டாம்'' என்பது இறைவன் தூதரின் ஆணையாம்.

ஓ, அந்நாட்களின் நினைப்பே, காலத்தின் வாளானது (அப்பொழுது)

நம் கரத்தின் உரத்துடன் உறவு கொண்டிருந்தது.

நாம் மாந்தரின் இதயங்களில் சமயத்தின் வித்தினைத் தூவினோம்.

உண்மையின் வதனமதை மறைத்திருந்த திரையினை அகற்றினோம்;

நம் ஆணிகள் இவ்வகிலத்தின் முடிச்சைச் கிழித்து நெகிழ்வித்தன,

வணக்கத்தின் போது நாம் குனிந்தது வையத்திற்கு ஆசிகள் வழங்கியது

உண்மையின் கலத்திலிருந்துச் சிவந்த மதுச்சாரத்தைப் பொங்கி வழியச் செய்தோம் நாம்,

நாம் பழங்கால மதுக்கடைகளைச் சாடினோம்.

பழைய மதுவிருக்கும் கோப்பைக்கு உரியவனே

உன்மதுவின் சூட்டால் பளிங்குக்கிண்ணம் நீராய் மாறியது.

நீ, உன் பெருமையில், செருக்கில், உன்னையே ஏமாற்றிக் கொள்ளுவதில்

எங்களின் வெறுமைத் தன்மைக்காக இகழுகிறாயா?

எங்களின் கிண்ணம் கூடக் களியாட்டவிருந்தை அழகாக்கியிருக்கிறது;

எங்களின் நெஞ்சம் ஓர் உணர்ச்சியை உரித்ததாய்ப் பெற்றிருந்தது.

புது யுகம், அதன் சிறப்புக்கள் அனைத்துடனும்

எங்களின் பாதத்தின் புழுதித் துகளிலிருந்து எழுந்திருக் கிறது.

எங்களின் உதிரம் இறையின் அறுவடைக்கு நீர் வார்த் திருக்கிறது,

இறைவனை வணங்குபவர் அனைவருமே எங்க ளுக்குக் கடன்பட்டவர்தாம்,

தக்பீரானது உலகிற்கு எங்களின் சம்மானமாகும்.

எங்களின் களிமண்ணாலேயே கஅபா கட்டப்பட்டது.

எங்கள் மூலம்தான் இறைவன் குர்ஆனைக் கற்பித்தான்

எங்களின் கைவழியாகத்தான் அவன் தன் அளவறு செல்வங்களை அள்ளிக் கொடுத்தான்.

எங்களிடமிருந்து மணிமுடியும் முத்திரையும் அகன்று விட்டபோதினும்,

எங்களின் இரக்கம் நிலையை ஏளனத்துடன் பார்க்க வேண்டாம்!

உன் விழிகளுக்கோ நாங்கள் ஒன்றிற்கும் உதவாதவர் தாம்,



பழையனவற்றைச் சிந்திப்பது இழிவானதேயாம்.

''அல்லாஹ்வைத் தவிர்த்து வேறு ஆண்டவன் இல்லை'' என்ற பதிலிலிருந்து நாங்கள் கௌரவம் பெற்றி ருக்கிறோம்,

நாங்கள் தாம் பிரபஞ்சத்தைக் காப்பவர்களாகும்.

இன்று நாளை இவற்றின் கவலையிலிருந்து விடுதலையாகி இருக்கிறோம்.

ஒரே இறைவனை நேசிக்கிற ஒருவருக்கொருவ ரிடமும் அன்பு கொள்வதென்று நாங்கள் பிரமாணம் செய் திருக்கிறோம்.

நாங்கள் தாம் இறையின் இதயத்தில் மறைந்திருக்கும் மனச்சான்றாவோம்,

நாங்கள்தாம் மூசா, ஹாரூனின் வழித்தோன்றல் களாவோம்.

எங்களின் ஒளியில்தான் பரிதியும் மதியும் இன்னும் கூடப் பிரகாசமாயிருக்கின்றன,

மின்னல் ஒளிகள் இன்னும்கூட எங்களின் மேகங் களில் மறைந்திருக்கின்றன.

எம் சாரத்தில்தான் தெய்வீகத் தன்மை பிரதிபலிக்கப் படுகிறது;

முஸ்லிமின் உட்பொருள் இறைவனின் அடையாளங் களில் ஒன்றாகும்.

## 19

இக்பால் அவர்கள் இறுதியாக இறைவனிடம் முறையிடுகிறார், தமக்கு வேண்டியவற்றைக் கேட்கிறார்.

ஓ, பிரபஞ்சத்தின் உடலத்தில் ஆன்மாவைப் போல் இருப்பவனே,

நீயே எங்களின் ஆன்மா ஆவாய், நீ என்றும் எங்களிடமிருந்து ஓடிக் கொண்டிருக்கிறாய்

உன் அருளால்தான் வாழ்வின் வீணையுள் இசை எழுகிறது.

வாழ்க்கை, இறப்பைப் பார்த்துப் பொறுமை கொள்கிறது, இறப்பானது உனக்காகவே இருக்கும்பொழுது.

மீண்டும் ஒருமுறை கவலும் எங்களின் இதயங்களுக்கு இதம் கொணர்வாய்,

மீண்டும் ஒருமுறை எங்களின் நெஞ்சங்களில் வதிவாய்!

மீண்டும் ஒருமுறை எங்களிடமிருந்து, பெயரின், புகழின் தியாகத்தை வேண்டுவாய்,

எங்களின் உரமற்ற அன்பினை உரப்படுத்துவாய்,

நாங்கள், அடிக்கடி விதியைப் பற்றிக் குறை கூறி முறையிட்டுக் கொண்டிருக்கிறோம்.



நீயோ அதிக விலையுள்ளவனாயிருக்கிறாய், எங்களிடமோ ஒன்றுமே இல்லையே.

வெறுங் கையினருக்குக் காட்டாது உன் வதனத்தினை மறைத்துக் கொள்ள வேண்டாம்!

சல்மான், பிலாலின் அன்பினை மலிவாய் விலைபடுத்துவாய்!

எங்களுக்கு உறக்கமற்ற விழியையும் உணர்வுமிக்க இதயத்தையும் வழங்குவாய்,

மறுபடியும் எங்களுக்குப் பாதரசத்தின் தன்மையைத் தருவாய்!

வெளிப்பட்ட உன் அடையாளங்களில் ஒன்றை எங்களுக்குக் காட்டுவாய்,

எங்கள் பகைவரின் பிடரிகள் தாழுவதற்காக!

இந்த பதரை எரியை முடியாய்ச் சூடிய மாலையாய் மாற்றுவாய்,

இறைவனல்லா அனைத்தையும் எங்களின் எரியால் கொளுத்துவாய்,

இஸ்லாத்தின் மக்கள் ஒற்றுமையின் கயிற்றை தம் கைகளிலிருந்து அகலவிட்டபொழுதுதான்

அவர்கள் ஒரு நூறு பள்ளங்களில் வீழ்ந்தார்கள்.

நாம் உலகில் தாரகைகளைப் போல் சிதறிக் கிடக்கின்றோம்;

ஒரே குடும்பத்தவராயினும் நாம் ஒருவருக்கு ஒருவர் புதியவராய் இருக்கிறோம்.

இந்தச் சிதறிய இதழ்களைச் சேர்த்துக் கோப்பாய்,

அன்பின் சட்டத்தை மீண்டும் கொணர்வாய்!

முன்போல் உனக்கு ஊழியம் புரிய எங்களைத் திரும்ப எடுத்துக்கொள்ளுவாய்,

உன்னை நேசிப்பவர்களிடம் உன் காரியத்தை ஒப்பு விப்பாய்!

நாங்கள் பிரயாணிகளாவோம்: துறப்பதை எங்களின் எல்லையாய் வழங்குவாய்

எங்களுக்கு இப்ராகீமின் வலிய நம்பிக்கையை வழங்குவாய்

''அன்பிற்கு வேறு இறைவனில்லை'' என்பதன் பொருளை உணர்த்துவாய்.

''அல்லாஹ்வைத் தவிர்த்து'' என்பதன் இரகசியத்தை எங்களுக்கு அறிவிப்பாய்!

பிறருக்காக மெழுகுவர்த்தியைப் போல் எரியும் நான்

மெழுகுவர்த்தியைப் போல் அழுவதற்கு எனக்கே நான் கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன்.

ஓ இறைவனே! இதயத்தைக் கிளரும் விழிநீர்,

வெறிமிக்கது, வேதனையால் வருத்தமுற்றது, அமைதியை எரித்து உண்டது.

நான்காவில் விதைக்கலாமா, எரிதழலாய் வளரலாமா

அது பூவரசு மலரின் உடையிலிருந்து எரியின் குறியை அழித்துச் செல்லுகிறது!

என் இதயம் கடந்த காலத்துடன் இருக்கிறது, என் விழியோ எதிர்காலத்தின் மீதிருக்கிறது:



குழுவின் நடுவில் ஓர் தனியனாவேன் நான்.

''ஒவ்வொருவனும் என் நண்பனாயிருப்பது போன்று பாவனை செய்கின்றான்,

ஆனால் ஒருவனும் என்றுமே என் ஆன்மாவிற்குள் இருக்கும் இரகசியங்களைத் தேடியதில்லை''

ஓ, இறைவா, விரியுலகில் எங்கிருக்கிறான் என் தோழன்?

நான் சினாயின் புதராயிருக்கிறேன்: எங்கிருக்கிறார் என் மூசா?

நான் கொடுமையுள்ளவனாயிருக்கிறேன், எனக்கே நான் பல தீங்குகள் புரிந்திருக்கிறேன்,

நான் என் நெஞ்சத்தில் ஓர் எரியை மூட்டி வளர்த் திருக்கிறேன்,

அவ்வெரியோ அறிவின் பண்டங்களை எரித்துச் சாம்பராக்கக் கூடியதாகும்,

விவேகத்தின் முன்றானைதனில் நெருப்பை வைப்பாய்

அறிவிற்குப் பைத்தியம் தான் பாடம் கற்றுக் கொடுக்கிறது

அறிவை உட்பொருளே எரித்து விட்டிருக்கிறது:

அதன் சுவாலை பரிதியை வானில் அரியணை ஏற்றுகிறது.

மின்னல்கள் மரியாதை செலுத்தும் முறையில் கால மெலாம் அதனை வலம் வருகின்றன.

என்விழி, பனித்துளிபோல் அழுகையில் மூழ்கியது,

ஏனெனில் அம்மறைவான எரியானது என்னிடமே ஒப்படைக்கப்பட்டிருந்ததனால்.

நான் மெழுகுவர்த்திக்குக் கற்பித்தேன் வெளிப்படையாய் எரியுமாறு,

உலகின் விழிகளுக்குத் தெரியாமல் நானே எரிந்த பொழுது.

இறுதியில் எரியின் கொழுந்துகள் என்னுடைய மயிர் ஒவ்வொன்றிலிருந்தும் வெடித்து எரிந்தன,

என் சிந்தனையின் இரத்தக் குழாய்களிலிருந்து அனல் விழுந்தது:

என் குயில் அனற் பொறியாகிய மணிகளைப் பொறுக்கியது.

தீயில் தோய்ந்த கீதமொன்றை உண்டு பண்ணியது.

என் யுகத்தின் மார்பிலே நெஞ்சத்தை காணவில்லை.

மஜ்னூன் வேதனையால் துடிக்கிறான் லைலாவின் அம்பாரி வெறுமையாயிருப்பதனால்.

தனியாய் துடிப்பது மெழுகுவர்த்திக்கு எளிதன்று,

ஆஹ், எனக்குத் தகுந்த விட்டில் ஒன்றுமில்லையா?

எத்துணைகாலம் நான் என் கவலையைப் பகிர்ந்து கொள்ளும் ஒருவனுக்காகக் காத்திருப்பேன்?

எத்துணை காலம் நான் உற்ற நண்பன் ஒருவனைத் தேடித் திரிய வேண்டும்?

ஓ, திங்களுக்கும் தாரகைகளுக்கும் ஒளிதரும் முகத்திற்குரியவனே,



உன் எரியை என் ஆன்மாவிலிருந்து எடுத்துக் கொள்ளுவாய் !

என் மார்பில் வைத்திருப்பதை திரும்ப எடுத்துக் கொள்ளுவாய்,

என் கண்ணாடியிலிருந்துத் துளைத்துச் செலும் ஒளியை அகற்றுவாய்,

அல்லது ஒரு பழைய தோழனையாவது வழங்குவாய் அனைத்தையும் எரிக்கும் என் அன்பின் ஆடியாயிருப்பதற்கு!

ஆழியில், அலையும் அலையும் மோதிக்கொள்ளுகிறது :

ஒவ்வொன்றும் அதன் உணர்ச்சியால் துடிக்கும் ஒரு பங்காளியைப் பெற்றிருக்கிறது.

விண்ணகத்தில் தாரகை தாரகையுடன் உறவாடுகிறது,

ஒளிமிகு திங்கள் இரவின் தாள்மீது தன் தலையை வைக்கிறது.

காலை இரவின் கரிய பக்கத்தைத் தழுவுகிறது.

இன்று, நாளைக்கெதிரே தன்னை வீசிக்கொள்ளுகிறது.

ஓராறு பிறிதோராற்றில் கலந்து மறைகிறது,

காற்றின் அசைவு நறுமணத்தில் இறக்கிறது.

கானகத்தின் ஒவ்வொரு மூலை தனிலும் களிநடம் நிகழ்கிறது,

பித்தன், பித்தனுடன் கூத்தாடுகிறான்.

ஏனெனில் உன் சாரத்தில் நீயொரு தனியனாவாய்,

நீ உனக்காக முழு உலகு ஒன்றையே விரித்திருக்கிறாய்.

நான் களத்தில் காணும் பூவரசுபோலாவேன்,

நண்பர் மத்தியிலோ நான் ஒரு தனியன்.

நான் உன் அருளை இரக்கிறேன், பரிவு மிக்க நண்பன் வேண்டி,

என் இயல்பின் இரகசியங்களில் தேர்ந்தவன்,

பைத்தியமும் அறிவும் கொண்ட தோழன்,

வீண் விஷயங்களின் மாய உருவை அறியா ஒருவன்,

நான் என் பிரலாபத்தை அவன் ஆன்மாவிடம் நம்பிக் கூறலாம் அல்லவா

மீண்டும் என் வதனத்தை அவன் இதயத்தில் காணலாம் அல்லவா,

அவன் உருவை நான் என் களி மண்ணில் வார்ப்பேன்,

அவனுக்கு நான், விக்கிரகம் வணங்குபவன் இருவராயும் இருப்பேன்.

* * *